KALKI 30-5-82 ரூ.1 20

# கல்கி

"அவர் தான் இருக்கிறதுலே பெரிய பரிசாகக் கொடுக்கிறார்னு நினைக்கிறேன்."

"அவர் பெரிய அட்டைப்பெட்டி தயாரிப்பாளராச்சே!"

# அர்விந்த்

வழங்கும் அற்புத
நெசவு நய
பருத்திகள்



டெக்ஸ்டைல்களிலே
ஐம்பது ஆண்டின்
அதி உன்னதம்.





ரீடெய்ல் கடை : மெ/ஸ். கௌதம்குமார் & கோ; கல்பாதேவி ரோடு, பம்பாய்-2, ● மெ/ஸ். ஈஸ்வர்ஸ், 26 பி, மேற்குக் கோபுரத்தெரு, மதுரை-1,● மெ/ஸ். ஆனந்த் டெக்ஸ்டைல்ஸ், 91,பெரியகடைத்தெரு, திருச்சி-8.

Interpub/AM/7/82 TAM



# அன்புடன் கொஞ்சம் வம்பு

● ஜார்ஜ் ஃபெர்னண்டஸ், ஜனதா மந்திரி சபையில் தொழிலமைச்சராய் இருந்தபோது, தம் வீட்டுக் குளியலறைக்கு மட்டும் பதினேழாயிரம் ரூபாய்செலவழித்தாராம். இந்த நியூஸை வட மாநில நீதிபதி யொருவர் தெரிவித்ததாய் சமீபத்தில் ஒரு நிகழ்ச்சியில் பேசுகையில் நீதிபதி கிருஷ்ணய்யர் குறிப்பிட்டார். வாவ்!

● சென்னையில் முக்கியமான பகுதி யொன்றில் அடுத்தடுத்து இரு மருத்துவ மனைகள். ஒரு மருத்துவ மனையின் காம்பவுண்டுக்குள் ஒரு மெடிகல் ஷாப். அடுத்துள்ள மருத்துவ மனை டாக்டர்கள், எதிர் மருத்துவ மனை மெடிகல் ஷாப்பில் கண்டிப்பாய் மருந்து வாங்கக் கூடாது என நோயாளிகளை வற்புறுத்துகிறார்களாம். மயிலை கபாலீஸ்வரர் தான் விசாரிக்க வேண்டும்.

● கொஞ்ச நாட்களுக்கு முன் ஒரு பாங்க் கிளார்க்குகளுக்கான தேர்வை நடத்தி, தற்போது இண்டர்வியூவுக்கான அழைப்புகள் அனுப்பப்பட்டு விட்டன. இப்போது ஒரு நியூஸ் கிடைத்தது. பாங்க் சம்பந்தப்பட்ட முக்கியமானவர் ஒருவரது மகள் குறிப்பிட்ட நாளில் பரீட்சை எழுத முடியாது போனதால், பரீட்சையையே கொஞ்ச நாள் தள்ளித்தான் நடத்தினார்களாம். இப்படி கூட்டுறவாய் தில்லு முல்லு பண்ணினால் யார் கேட்பது?

● ரஜினிகாந்த், தம் குழந்தையைப் புகைப்படம் எடுக்க எவரையும் அனுமதிப்பதில்லை என்பது தெரிந்த விஷயம். குழந்தையைக் காட்டுவதில்கூட ஏகப்பட்ட ரெஸ்ட்ரிக்ஷன்ஸ் ஸாம். சமீபத்தில் ஒரு சினிமா நிருபர் குழந்தையைப் போட்டோஎல்லாம் கூட வேண்டாம், பார்த்துவிட்டுப் போறேனே! என்று கேட்டபோது, ரஜினி, ''அடே... உன்னைப் பத்தி எனக்குத் தெரியாதா? நீ கண்ணுலேயே போட்டோ புடிச்சிக்கிட்டுப் போய் எழுதிடுவியே! நீ போயிட்டு வா'' என்று கூறிவிட்டாராம்.

● காலேஜ் அட்மிஷனுக்குத்தான் மாணவன் கேட்ட குரூப் கிடைக்குமோ, கிடைக்காதோ என நாலைந்து கல்லூரிகளில் அப்ளிகேஷன் வாங்கி விண்ணப்பிப்பான். இன்று 'முன்னேற்றம்': என் நண்பர் தம் குழந்தையை எல். கே. ஜி.யில் சேர்க்க வாங்கிய அப்ளிகேஷன்களின் எண்ணிக்கை ஐந்து. செலவழித்தது (அப்ளிகேஷன் ஃபாரங்களுக்கு மட்டும்) சுமார் ஐம்பது. பள்ளிகளுக்கு ஃபாரம் வாங்க, பூர்த்தி செய்து கொடுக்க, குழந்தையை நுழைவுப் பரீட்சைக்கு அழைத்துச் செல்ல என்ற விதத்தில் பெட்ரோல் செலவு இதில் அடங்கவில்லை.

● இந்த வருடம் 10ம் வகுப்பு (எஸ்.எஸ்.எல். சி.) தேர்வில் தமிழ் மீடியம் கணிதம் கேள்வித்தாளில் 15 மார்க்குகளுக்கான கேள்விகள் தவறாய் அச்சிடப்பட்டிருந்தன. எனவே அந்தக் கேள்விகளுக்கு உரிய எண்ணைப் போட்டு ஏதாவது எழுதினாலே மார்க் தரச் சொல்லிப் பேப்பர் திருத்திய ஆசிரியர்களுக்கு உத்தரவிடப்பட்டதாம். இதிலொரு தமாஷ். ஒரு மாணவன் தவறான கேள்விகளின் எண்களை எழுதி எதிரே 'இந்தக் கணக்கு தப்பாகத் தரப்பட்டுள்ளது' என எழுதி யிருந்தானாம். ஒரு பேப்பர் திருத்திய ஆசிரியர் சொன்னார்.

● சென்னை ஸ்பென்ஸர் அருகிலுள்ள ஸிக்னலில் ஓர் அறிவிப்பு: 'It is better to be late Than to be called late Mr....

-ஜானி





# நீங்கள் ? கேட்டவை



✕ கே. வரதராஜன், சென்னை-5

? சமீபத்தில் நீங்கள் மிகவும் ரசித்த திரைப்படம் எது?

! Stalag-17 என்ற பழைய ஆங்கிலப் படம். அமெரிக்கன் சென்டரில் திரையிட்டார்கள். ஒரே செட்: இரண்டாம் உலகப் போரின்போது ஜெர்மனியில் ஒரு கைதிகள் முகாம். அதில் சிறையிருக்கும் அமெரிக்கக் கைதிகளிடையே ஒற்றறிய ஒரு ஜெர்மானியன் தானும் ஓர் அமெரிக்கக் கைதிபோல் நடிக்கிறான். ஒரு தந்திரத்தைக் கையாண்டு பல ரகசியங்களை ஜெர்மானிய அதிகாரிகளுக்குத் தெரிவிக்கிறான். கைதிகள் தம்மில் வேறு ஒருவனைத் துரோகி எனச் சந்தேகித்துக் கடைசியில் உண்மை அம்பலமாகும்போது துரோகியாகக் கருதப்பட்டவன் ஹீரோவாக, ஹீரோவென மதிக்கப்பட்டவன் துரோகியாக... என்ன விறுவிறுப்பு! காட்சிக்குக் காட்சி சஸ்பென்ஸ்! இயல்பான ஹாஸ்யம்! இத்தனைக்கும் கதாநாயகி என்ற நாமதேயமே கிடையாது! தைரியம் வருமா நம்மில் யாருக்கேனும்?

✕ திருமதி கோமதி நடராஜன், மதுரை

? துரியோதனன் உலகம் முழுவதும் தேடி நல்லவனே கிடையாது என்றானாம். தருமர் உலகில் கெட்டவர்களே இல்லை என்றாராம். தங்கள் கண்ணோட்டம் எப்படி?

! நான் துரியோதனனைப் போல் அவ்வளவு மோசமும் இல்லை. தருமனைப் போல் அத்தனை உயர்ந்தவனும் இல்லை. அதனால் பழகுகிறவர்களிடம் உள்ள நல்லது கெட்டது இரண்டும் எனக்குத் தெரிகிறது.

✕ கே. எஸ். சுப்ரமணி, சென்னை-1

? இளைஞர் வேணு தமிழ்வாணன் ஒரு பக்கக் கட்டுரை மூலம் தத்துவம் பேசுகிறார் என்று கல்கி கிண்டல் பண்ணுகிறது. இளைஞர் வேணுவுக்குத் தத்துவ எண்ண முதிர்ச்சி கூடாது என்கிறீர்களா?

! பத்மஜாவின் கிண்டலை ரசித்தவர் வேணு தமிழ்வாணன் மட்டுமல்ல; அவர் தாயாரும் கூட என்பதை வேணு, கல்கி ஆசிரியருக்கு எழுதிய கடிதம் மெய்ப்பிக்கிறது. நகைச் சுவையை ரசித்துச் சிரிக்கக் கற்றுக் கொள்ளுங்கள் மிஸ்டர் சுப்ரமணி.

✕ ஜோதி திரவியம், புதுவை-1

? கல்கி பொன்விழாவில் குறை ஏற்பட்டதாக மணியன் குறிப்பிட்டுள்ளாரே?

! நான் விழாவுக்குப் போக முடியவில்லை. சென்று வந்த நண்பர் சொல்கிறார்: ''சினிமாவும் அரசியலும் இன்றி கல்கி நடத்துவருவது அதிசயாதனை என்ற அன

✕ ம.பொ.சி.





வில் நகைச்சுவை இழையோடப் பாராட்டினார்களே யன்றி மற்ற பத்திரிகைகள் ஏன் போடுகின்றன என்று யாரும் சாடவில்லை.

✖ பூவை தங்கபாரதி, கோவை

? மத்திய அரசின் நியூஸ் ரீலையும் தமிழ்நாடு அரசின் நியூஸ் ரீலையும் பார்த்தால்... அரசின் சாதனைகள் கணக்கிலடங்காதுபோல் தோன்றுகிறதே?

! என்ன சாதனைகள் புரிந்தார்களோ இல்லையோ ஒரு நியூஸ் ரீலை சுவாரஸ்யமாக எடுக்கும் சாதனையை இன்னும் அரசு செய்யவே இல்லை.

✖ ஆர். தீபன், புதுவை

? இன்றைய இல்லற வாழ்வில் யார் யாருக்கு அடங்குதல் சாலச் சிறந்தது?

! ஒருவருக்கு ஒருவர் அடங்கிப் போவதற்குப் பதில் ஒருவரை ஒருவர் மதிக்கக் கற்றுக்கொள்வது சாலச் சிறந்தது.

✖ எல். ஆர். விஜயகுமார், சென்னை-28

? சிறந்த கேள்வி கேட்டவருக்குப் பணம் கொடுப்பது ஏதனால்?

! சிறந்த பதிலையும் வரவழைத்ததனால்!

✖ ஆர். இளங்கோ, எந்தல்

? உண்மை எப்போது ஊமை ஆகிறது?

! அர்ஜெண்டினா விவகாரம் பற்றி நம் பிரதமர் வாய் திறக்க மறுக்கும்போது!

✖ என். ஸ்ரீதர், கரக்பூர்

? மெழுகுவர்த்தி தன்னைத்தானே உருக்கிக் கொண்டு பிறருக்கு எப்படி வெளிச்சத்தைத் தருகிறதோ அதுபோல் இன்றைய அரசியல் வாதிகளில் யாரேனும் இந்தியாவில் உள்ளனரா?

! அத்தகைய ஒருவருக்குத் திருத்தணியில் அண்மையில் சிலையெழுப்பி தமிழகம் நன்றி செலுத்தியிருக்கிறதே! ம. பொ. சி. சிலை நிறுவவும் விழா எடுக்கவும் அரும் பாடுபட்ட வகையில் ''கோல்டன்'' ந. சுப்பிரமணியம் பொன்னான காரியம் ஒன்றைச் செய்திருக்கிறார்.

✖ பி. ஜே. ரத்தன், தஞ்சை *

? உறுதி உள்ளத்தில் இருப்பது அவசியமா? உடலில் இருத்தல் அவசியமா?

! காப்பி அடிக்காமல் இருப்பதற்கு உறுதி உள்ளத்தில் இருக்க வேண்டும். காப்பி அடிப்பவரைத் தட்டிக் கேட்க வரும் அதிகாரிகளை மிரட்டி விரட்ட உடலில் உறுதி இருந்தாலே போதும்!

மாணவர்கள் மன உறுதி இழக்க இரு காரணங்கள்: (1) மாணவனாக இருக்கும் போது 'படிக்கிறேன்' என்று தலை நிமிர்ந்து கூறலாம். படிப்பை முடித்து விட்டாலோ 'வேலை தேடுகிறேன்' என்று தலை குனிந்து கூற வேண்டியிருக்கிறது. எதிர்காலம் சூன்யமாகத் தெரியவே கடமையில் ஆர்வம் குறைகிறது; கலவரத்தில் ஆர்வம் அதிகரிக்கிறது. (2) வழி காட்ட வேண்டியவர்களே வழி தப்பிப் போவது.

காப்பி அடிப்பதை நர்சரிப் பழக்கமாக்கும் பரீட்சை முறையே மாற்றி அமைக்கப்பட வேண்டும். இன்று அங்கிங்கெனாதபடி எங்கும் ஞானம் விரவிக் கிடக்கிறது. அதை அடையும் மார்க்கத்தை மாணவன் புரிந்து கொண்டிருக்கிறானா என்று சோதித்தால் போதும். அதற்கேற்ப வினாத் தாள்களைத் தயாரித்தால் மாணவர்களை லைப்ரரியில் அமர்ந்தே பரீட்சை எழுதச் செய்யலாம்!

✖ இரணியன் கலை, தூத்துக்குடி-6

? அந்த நாலு பேருக்கு நன்றி என்பதில் அந்த நாலு பேர் யார்?

! ராதாகிருஷ்ணன் 'கிராக்கி' பண்ணிக் கொள்ளாமல் ஐந்து பேருக்குக் கூட நன்றி சொல்வார். தமக்கு மேலே இருந்த ஐந்து பேர்களைத் தாண்டிக் குதித்துக் கொண்டு

✖ ராதாகிருஷ்ணன்



டைரக்டர் ஜெனரல் ஆஃப் போலீஸ் ஆகியிருக்கிறார், எம். ஜி. ஆரின் சலுகை பெற்ற ராதாகிருஷ்ணன். அந்த ஐவர்: வி. வி. நரசிம்மன், வி. ஆர். லக்ஷ்மி நாராயணன், சே. ரவீந்திரன், பொன் பரமகுரு, கே. ராமமூர்த்தி. அடுத்தாற்போல் 'சலுகை' என்ற தலைப்பிலோ, 'தாண்டிக் குதி' என்ற தலைப்பிலோ 'கிராக்கி' கட்டுரை எதிர்பார்க்கிறோம்!

✖ மூ. நவீன், பெங்களூர்-21

? காதல் என்பது புனிதமானது; காதல் என்பது தேவையற்றது; காதல் என்பது முட்டாள் தனமானது என்றெல்லாம் சொல்லக் கேட்டுப் புளித்து விட்டது. நீர் ஏதாவது புதிதாகச் சொல்ல முடியுமா?

! காதலைப் பற்றிச் சொல்லக் கேட்டுக் கொண்டே இருந்தால் புளித்துத்தான் போகும். காதல் என்பது அனுபவிக்கப் பட வேண்டியது. அப்போது அது புனிதமானது, தேவையுள்ளது, அறிவு சார்ந்தது எனப் புரிந்து கொள்ளலாம்.

பி.கு.: வயதான காதலுக்கு 'கிக்' அதிகம்.

✖ ரூ 10 பரிசு பெறுபவர்: பி. ஜே. ரத்தன், 38, இ-கோவில் 3ம் தெரு, மா. சாவடி தஞ்சை-1






✕ ரமேஷ்பாபு

## பி. டி. ராஜன்





✕ மித்ரா வசிஷ்ட்

✕ ஜெய்சிங்



✕ எம். ஏ. அலி



✕ பி. டி. ராஜன்

● சென்னை ஹெச். டி. ராஜா தெரு 9ம் எண் வீட்டின் பின்புறத்தில் உள்ள அவுட் ஹவுஸில் இருந்து கொண்டு மரத் தகடுகளில் ஓவியங்களை உருவாக்குகிறார் பெத்து ராஜன் என்கிற முப்பது வயது இளைஞர்.

ஓவியங்களை முதலில் காகிதத்தில் வரைந்து கொண்டு அதை அப்படியே பெரிய அளவில் மரத் தகட்டில் செய்து விடுகிறார். சாதாரண மரத் தூளும், கண்ணாடித் தூளும் இவரே கண்டுபிடித்த ஒருவித ரசாயனப் பசை கொண்டு ஓவியத்தில் ஒட்டிக் கொள்ளும் போது ஓவியம் உயிர் பெற்று விடுகிறது. அலுமினியத் தகடு, செப்புத் தகடுகளின் மீதும் கூடத் தமது ஓவியங்களைப் பதித்துக் காண்பிக்கிறார் ராஜன்.

பம்பாயிலும், சென்னையிலும் பல அடுக்குமாடி அலுவலகங்களிலும், வீடுகளிலும் இவரது கைவண்ணம் காட்சியளிக்கிறது.

ரஜினிகாந்த், ஜெய்சங்கர், லதா, பத்மினி என்று பல சினிமா நட்சத்திரங்களின் வீடுகளில் இவரது மியூரல் ஓவியங்கள் மிளிருகின்றன. சில அமைச்சர்கள் வீடுகளிலும் கூட.

பெத்துராஜன் என்கிற இந்த பி. டி. ராஜன், சிவகாசிக்காரர். **- சாருகேசி**

## மித்ரா வசிஷ்ட்

● பாஸ்போர்ட் அதிகாரி திருமதி மித்ரா வசிஷ்ட் அவர்களின் இல்லத்திற்குச் சென்றால் தாமே செய்த இனிப்பு ஒன்றுடன் வரவேற்பார். ''ஒவ்வொரு ஞாயிறு அன்றும் சமையலறைக்குள் நுழைந்தால் ஒரு புது வித இனிப்புடன்தான் வெளியே வருவேன். அந்த வாரம் முழுவதும் வரும் விருந்தினர்களுக்குக் கொடுக்க வசதியாக இருக்கிறது'' என்று கூறுகிறார். 1974 முதல் 76 வரை தில்லி ராஷ்டிரபதி பவனில் அப்போதைய ஜனாதிபதி திரு பக்ருதீன் அலி அகமது அவர்களின் மெய்க்காப்பாளராக 'இவர் கணவர் திரு வசிஷ்ட் பதவி வகித்தபோது தினமும் ராஷ்டிரபதி பவன் சமையலறைக்குள் சென்று புது தினுசு சமையல் குறிப்புக்களைக் கற்றுக் கொண்டு ஒரு பெரிய நோட்டுப் புத்தகம் நிறைய எழுதி வைத்துக் கொண்டிருக்கிறார். 'என்னுடைய ஹாபியே சமையல்தான்' என்று கூறுகிறார்.

தமிழ் நாட்டைச் சேர்ந்த இவர் உத்தரப் பிரதேசத்தைச் சேர்ந்த திரு வசிஷ்டைக் காதலித்துத் திருமணம் செய்து கொண்டு இப்போது ஒரு மகன், மகள் இருவருக்குத் தாயாக இருக்கிறார்.

இவர் தம் குழந்தைகளைப் பத்திரிகைகளுக்குப் புகைப்படம் எடுப்பதை செண்டிமெண்டலாக விரும்புவதில்லை. காரணம் இவர் பதவி ஏற்ற புதிதில் ஒரு பத்திரிகையின் அட்டையில் இவர் குடும்பப் புகைப் படத்தைப் பிரசுரித்திருந்தார்கள். உடனே இவர் குழந்தைகள் நோய்வாய்ப்பட்டனராம். **-கலாமூர்த்தி**

புகைப்படம்: ஜெய்மோகன்

## ஆர். ரமேஷ்பாபு

● அடையாறு புற்று நோய் ஆஸ்பத்திரியில் அறுவைச் சிகிச்சை செய்யப்படவிருந்த ஒரு நோயாளிக்கு 'ஓ' பாஸிடிவ் ரத்தம் தேவைப் பட்டது. இந்தக் குரூப் ரத்தம் சற்று அரி

தானது. உடனே ஜெயின் கல்லூரி முதல்வரிடம் தொடர்புகொண்டு ரத்தம் கொடுக்க மாணவர்கள் யாரையாவது அனுப்புமாறு வேண்டிக்கொண்டனர் ஆஸ்பத்திரி நிர்வாகத்தினர். இரண்டாம் ஆண்டு பி. எஸ்.ஸி. படித்துக் கொண்டிருந்த ரமேஷ் பாபு அனுப்பப்பட்டார். பிழைத்துக்கொண்ட நோயாளியின் உறவினர் கையில் திணித்த ரூபாய் நோட்டுக்களைத் திருப்பிக் கொடுத்துவிட்டார் ரமேஷ் பாபு. இதுவரை ஆறு முறை ரத்தம் கொடுத்திருக்கும் ரமேஷ் பாபு என்.ஸி.ஸி.யில் அண்டர் ஆபீசர். கை நிறைய என்.ஸி.ஸி. விளையாட்டு, சாதனை சான்றிதழ்களை வைத்துக்கொண்டிருக்கிறார்.

### ஹர்பஜன் சிங்

“இதுவரை சத்ருக்னன்சின்ஹா, சுனில் தத் உட்பட கிட்டத்தட்ட 20 நடிக, நடிகைகள் என் மேல் வழக்குத் தொடர்ந்திருப்பார்கள். ஆனால் ஒன்றில்கூட என்னை குற்றவாளி என்று நிரூபிக்க முடியவில்லை” என்கிறார் பிலிம் மிரர் ஆசிரியரும் இப்போது பிரஸ் கவுன்சில் உறுப்பினராகவும் இருக்கும் ஹர்பஜன் சிங். இவர் அரசியலுக்காக நடத்தும் இன்னொரு பத்திரிகை 'இந்தியன் அப்சர்வர்'. மாநிலத்துக்கு மாநிலம் சென்ஸார் போக்கினைக் கடுமையாகச் சாடுகிறார் ஹர்பஜன்சிங். முதல் நாள் விற்பனையை அடுத்த நாள் பிரசுரிக்க வேண்டும் என்ற அரசின் ஆணையை நீக்கக் கோரி, சிறு, மற்றும் நடுத்தரப் பத்திரிகைகளின் செயலாளர் என்ற முறையில் பிரதமரிடம் மனுக் கொடுத்திருக்கிறார். ராஜீவ் காந்தியின் நெருங்கிய நண்பர். பிலிம் மிரர் பத்திரிகையின் விசேஷம்: விற்பனை 80000 பிரதிகள் என்றாலும், ஒரு சந்தாதாரர் கூட கிடையாது.

-தில்லப்பா

### அலி மரைக்காயர்

பெரிய எழுத்து விக்கிரமாதித்தன் கதைகள் எழுபத்தி ஏழில் நாற்பத்தி நான்கு கதைகளை பிரெஞ்சு மொழியில் மாற்றி பாரிஸ் வாசகர்களுக்கு அறிமுகப்படுத்திய எழுத்தாளர், பத்திரிகையாளர், திரு அலி மரைக்காயர். பிரெஞ்சு பிரஜா உரிமை பெற்றுக் குடும்பத்துடன் பல காலமாகப் பாரிசில் வாழ்ந்து வருபவர்.

காரைக்காலில் இருந்தபோது சாந்தி விகடன் என்ற பத்திரிகையையும் நடத்தியிருக்கிறார். மாலியரையும் அலெக்ஸாண்டர் டூமாஸையும் தமிழர்களுக்கு அறிமுகப்படுத்தியிருக்கிறார்.

பல ஆண்டுகளுக்கு முன் பாரிசில் ஒரு சிறிய மளிகை வியாபாரத்தைத் தொடங்கி, இன்று அதைப் பெரிய அளவில் விஸ்தரித்திருக்கிறார். தமிழர்களுக்குத் தேவையான பருப்பு, உளுந்து முதலியவற்றை வரவழைத்து விற்பதால் இவர் கடை திறந்திருக்கும் நேரத்திலெல்லாம் தமிழ் ஒலி வாடிக்கைக்காரர்களிடமிருந்து கேட்டுக்கொண்டே இருக்குமாம். மளிகைக் கடைக்குப் பெயர் மதராஸ் இந்தியா.

-கோமதி சுவாமிநாதன்

# பிரபலஸ்தரின் பேரன்கள்!

பிரதமரின் பேரனுக்கு ஆபத்து ஏதும் நேராமல் கண்காணிக்க ஸி. ஐ. டி.க்கள் அதே பள்ளியில் வேலைக்காரர்கள் போல் சேர்ந்து நடிப்பது பற்றிய செய்தியைப் படித்தேன். ஒரு விஷயம் நினைவுக்கு வந்தது.

கென்னடி ஜனாதிபதியாக இருந்தபோது அவர் குழந்தை ஜான் நியூயார்க்கின் பணக்காரர் பள்ளி ஒன்றில் சேர்க்கப்பட்டான். நர்ஸ்கள், காரோட்டிகள், மெய்க்காவலர்கள் எல்லாரும் 24 மணி நேரமும் அவனைக் கண்காணித்தனர். அத்தனை பேருக்கும் டிமிக்கி கொடுத்துவிட்டு ஒரு நாள் நழுவி விட்டான். ஒரே பரபரப்பு கவலை. 25000 நியூயார்க் போலீஸ் வீரர்கள் அவனைத் தேடினர். கடைசியில் பென்ஸில்வேனியா ரயில் நிலையத்தில் ஒரு டெலிபோன் பூத்தில் உட்கார்ந்து அழுது கொண்டிருக்கும் ஜானைக் கண்டு பிடித்தனர்.

என்ன ஆச்சு? ஏன் ஓடிவந்து விட்டான்? எதற்கு அழுகிறான்?

“என் பாட்டியிடம் போகணும் எனக்கு. அதுக்காகத்தான் ஓடிவந்து விட்டேன்” என்றான் ஜான். ஜனாதிபதியின் தாயார் ரோஸ் கென்னடியைத்தான் அப்படிக் குறிப்பிட்டான்.

-யார் கண்டது, வருண் அல்லது ராகுலும் இப்படி எல்லோருக்கும் டிமிக்கி கொடுத்து விட்டுப் பாட்டி இந்திரா காந்தியைக் காண ஓடிவந்து விடுகிறார்களோ என்னவோ?

தில்லி சத்யேந்திரநாத் சர்க்கார்

ஹிந்துஸ்தான் டைம்ஸில் வெளிவந்த ஒரு நேயர் கடிதம் இது. இது போல் உங்கள் ஊர் நாளிதழ் அல்லது சஞ்சிகையில் சுவையான நேயர் கடிதம் ஏதும் படித்தீர்களா? எந்த மொழியானாலும் சுருக்கித் தமிழாக்கம் செய்து மூலத்தையும் கத்தரித்து இணைத்து அனுப்புங்கள். பிரசுரமானால் பரிசு உண்டு. முடிவு தேதி ஜூன் 15. உறையின் மேல் “சுவையான கடிதம்” என்று குறிப்பிடவும்.



# தேர்தலோ தேர்தல்!



கருணாகரன்
ஹரியானா தோல்வி
கேரளா வெற்றி
ஹிமாசல தோல்வி
மேற்கு வங்க தோல்வி




ஹிமாசல பிரதேச வெற்றி
ஹரியானா தேர்தல் முடிவுகள்
லோக் தள்




வெற்றி! வெற்றி!




ஜனதா




மேற்கு வங்க வெற்றி
பாசு
கேரளா தோல்வி
நாயனார்




# பிரதமருக்கு எச்சரிக்கை!

தேர்தல் முடிவுகள் இந்திரா காந்திக்கு ஏமாற்றமளிப்பதாகத்தான் இருக்கும். ஹெலிகாப்டரிலும் விமானத்திலும் பறந்து, ஜீப்பிலும் காரிலும் விரைந்து, அவரும் மகனும் மேற்கொண்ட பிரம்மப் பிரயத்தனங்கள் எதிர்பார்த்த பலனைத் தரவில்லை.

கேரளத்தில் இ. காங்கிரஸ் கட்சி தலைமை தாங்குகிற கூட்டணிதான் வெற்றி பெற்றது. இ. காங்கிரஸின் தனிப்பெரும் வெற்றியாக இதனைக் கருத இயலாது. அங்கு நிலையான ஆட்சி அமைய எவ்வளவு வாய்ப்புண்டோ அதைவிட அதிகமாகவே கூட்டணியில் உட்பூசல் காரணமாக ஆட்சி கவிழவும் வாய்ப்புண்டு. இ. காங்கிரஸ் கட்சிக்குள்ளேயே நாடெங்கும் உட்பூசல்கள் மலிந்துள்ள இன்று, கேரளத்தில் கூட்டணியின் நிலையான ஆட்சி நீடித்தால் அதனை 'அற்புதம்' என்றே கூறலாம். அவ்விதம் ஓர் அற்புதம் நிகழ வேண்டுமெனில் கட்சித் தலைவர்கள் ஒருவரை ஒருவர் மதிக்கவும் ஓரளவு விட்டுக் கொடுக்கவும் தயாராகவேண்டும். 'கூட்டுறவே நாட்டுயர்வு' என்று நம் தலைவர்களுக்குப் பேசத் தெரிகிறதே யொழிய கூட்டுறவுப் பண்பாட்டைக் கட்சியிலும் ஆட்சியிலும் கடைப் பிடிக்கத் தெரியவில்லை.

மேற்கு வங்கத்தில் ஆட்சியிலிருந்த கம்யூனிஸ்ட் (மார்க்ஸிஸ்ட்) தலைமையிலான இடது சாரிக் கூட்டணியே மறுபடி பதவிக்கு வந்துள்ளது. கம்யூனிஸத்தின் அடிப்படைக் கொள்கைகள் நமக்கு ஏற்புடையன அல்ல எனினும் ஜோதி பாசுவின் ஆட்சியில் சில பல சட்ட ஒழுங்குப் பிரச்னைகள் தவிர திறமைக் குறைவோ லஞ்ச ஊழலோ காணப் படவில்லை. அதுவே மக்கள் அவர்களை மறுபடி தேர்ந்தெடுக்க வழி வகுத்திருக்கிறது.

ஹிமாசலப் பிரதேசத்தில் ''சற்றும் எதிர்பாராத விதமாக'' பாரதீய ஜனதா பெரும் பான்மை பெற்று வருவதாக ஆகாசவாணி யாரையோ திருப்திப் படுத்த மழுப்பினாலும் அங்கு பாரதீய ஜனதா வெல்லும் என்றே கடந்த பல நாட்களாக அரசியல் ஆய்வாளர்கள் கூறி வந்துள்ளனர். ஹிமாசலப் பிரதேசத்தில் அக்கட்சி பதவி ஏற்றால் அது தரப்போகிற நல்லாட்சியின் அடிப்படையில் தான் வேறு மாநிலங்களிலும் அதன் புகழ் பரவி அடுத்து நடக்கவிருக்கும் பொதுத் தேர்தலில் அக்கட்சி வோட்டுக்களைப் பெற முடியும் என்பதை அக்கட்சித் தலைவர்கள் மறக்கவே கூடாது.

ஹரியானாவில் லோகதளம் - பி. ஜே. பி கூட்டும், இ. காங்கிரஸும் ஏறத்தாழ சம அளவில் வெற்றி பெற்றுள்ளன. இங்கு இ. காங்கிரஸ் தூண்டிலில் போடாமல் இருக்கவேண்டுமே ஆயாராம் கயாராம்களின் மதிப்பு பெருகாதிருக்க வேண்டுமே என்ற கவலை இப்போதே ஆரம்பமாகி விட்டது.

நாலு மாநிலத் தேர்தல்களில் எதிலுமே இ. காங்கிரஸ் பூரண மெஜாரிட்டி பெற முடியவில்லை என்பதை நோக்குகையில் மக்களைப் பேச்சினால் மயக்குகிற அல்லது பணத்தினால் வாங்குகிற காலம் மலையேறி விட்டது என்பது புரிகிறது. அவர்கள் ஆட்சியிலிருப்போரிடம் திறமையை எதிர்பார்க்கிறார்கள் என்றும் ஏமாற்றமளித்தால் எதிர்த்தரப்பினருக்கு வாய்ப்புத்தரத் தயாராக இருக்கிறார்கள் என்றும் தெளிவாகிறது.

பிரதமருக்கு இது ஓர் எச்சரிக்கை. சட்ட ஒழுங்கு, விலைவாசி உயர்வு, வேலையில்லாத் திண்டாட்டம், லஞ்ச ஊழல் போன்ற மக்களைப் பாதிக்கும் அடிப்படைப் பிரச்னைகளுக்குத் தீர்வு காண்பதில் அவர் தீவிர கவனம் செலுத்திக் கொள்கைகளையும் அதற்கேற்ப மாற்றிக் கொள்ளவேண்டும். தம் கட்சிக்குள்ளும் ஜனநாயகத்தை வளர்க்கவேண்டும். இல்லையேல் மேன்மேலும் ஏமாற்றங்களையே அவர் எதிர்நோக்க நேரும்.




தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்

1982 மே 30
துந்துபி வைகாசி 16
மலர் : 40 இதழ் : 44

கல்கி




# ரவிகுல திலகன்

செம்பியன்

சந்திரலேகை நகர்க் கோட்டைக் காவலர்கள் ஜெயசிங்கனை நன்கு அறிந்தவர்களாதலால் அவனும் அராபியக் குதிரை வியாபாரியும் சுங்கம் செலுத்திய பின் சிரமமின்றித் திருவாசலைக் கடந்து முன்னேற முடிந்தது. பொறுமை கொள்வது தவறு என்று அறிந்திருந்தும்கூட, சந்திர லேகை மிக அழகான நகரமாக விளங்கக் கண்ட விஜயாலயனுக்குப் பெருமூச்சுக்களை உள்ளடக்கிக் கொள்ளமுடியவில்லை. அழகிய நகர் மட்டுமா? செல்வச் செழிப்பில் மிதக்கின்ற நகரம் கூட!

காலப் போக்கில் படிப்படியாக வளர்ந்த நகரம் போலன்றி ஒரே சமயத்தில் திட்டமிட்டு உருவாக்கப்பட்டது போல் அது நேர் நேரான தேரோடும் வீதிகளைக் கொண்டிருந்தது. இரு புறமும் மாட மாளிகைகளும் நான்மாடக் கூடங்களும் கம்பீர எழிலுடன் எழுந்து நின்றன. சாலையோரங்களில் நிழல் தரும் மரங்கள், ஆங்காங்கே பூங்காக்கள், செய்குன்றுகள், குளங்கள், புனலருவிகள். சற்றுத் தூரத்துக்கு ஒன்றாக வீதிகளில் இரு மருங்கிலும் கல் தூண்கள் நட்டு அவற்றின் மேல் பெரிய அகல் விளக்குகள் ஏற்றப்படக் காத்திருந்தன. மாலை நேரமானதால் ஏணி வைத்து ஏறி அவற்றில் எண்ணெய் ஊற்றிக் கனத்த திரி போட்டுக் கொண்டிருந்தான் ஒருவன். பெரிய மாளிகையாயினும் சரி, சிறிய வீடாயினும் சரி, கலை எழிலுடன் விளங்கி அடிக்கடி மேல் பூச்சு பெற்றுப் பளபளத்தன. சிறிய நகரமாயினும் சித்திர எழிலோடு விளங்கிய சந்திரலேகையில் பலவிதமான ஒலிகளும் கேட்டன. சாலையில் குதிரைகளும் ரதங்களும் பல்லக்குத் தூக்கிகளும் எழுப்பும் சத்தம்; சமயச் சார்புள்ள மடங்களில் வேத கோஷங்களின் ஓசை; கோவில் கோபுரங்களிலிருந்து எழும் சந்தியா கால பூஜை மணி ஒலி; நடன அரங்கு ஒன்றில் பயிற்சி பெறும் பெண்களின் கால் சிலம்புகளின் கிண்கிணி நாதம்; தோட்டங்களிலும், புல்வெளிகளிலும் விளையாடும் குழந்தைகளின் சிரிப்பொலி; சிற்ப ஓவியக் கூடங்களில் கல் உளிகளின் கல் கல் ஓசை என்று பலவாறானவை.

பல பிரதான வீதிகளைக் கடந்து நகரின் மையமான பகுதிக்கு வந்தபோது ஒரு பெரிய மதில் சுவர் எதிர்ப்பட்டது. ''அரண்மனைப் பகுதிக்கு வந்து விட்டோம்'' என்றான் ஜெயசிங்கன். மதிலுக்கு அப்பால் சற்றுத்தூரத்தில், இதுவரை பார்த்த மாளிகைகளையெல்லாம் விட மிகப் பெரிதான, கலையழகு மிக்க, நேர்த்தியான ஒரு கட்டிடம் நடு நாயகமாக விளங்கியது. 'இங்குதான் மன்னர் வாழ்கிறார்' என்று சொல்லாமலேயே உணர்த்தியது. அதன் எதிரே இரு பக்கங்களிலும் இரு வரிசைகளாக மேலும் சிலசிறிய மாளிகைகள். அரச குடும்பத்தைச் சேர்ந்த வேறு பலருக்கு, மந்திரி பிரதானிகளுக்கு, அரண்மனை அதிகாரிகளுக்கு என ஒதுக்கப்பட்ட அவை, பக்கவாட்டு மதில்களை ஒட்டிய மாதிரி எழும்பியிருக்க, மையத்தில் வண்ண மலர்கள்



பூத்துக் குலுங்கும் தோட்டமும் புல் வெளியும் தாமரை பூத்த தடாகமும் தென்பட்டன.

"அதோ, முன் மதிலை யொட்டி இடப்புறம் உள்ள முதல் மாளிகையில்தான் உத்தமசீலி வசிக்கிறாள்" என்றான் ஜெயசிங்கன். அந்தக் கணமே விஜயாலயனின் இதயம் படபடக்க ஆரம்பித்தது. எத்தனை நாட்கள் ஏக்கத்தோடு இந்தத் தருணத்துக்காகக் காத்திருந்திருக்கிறான்! எத்தனை உறக்கமற்ற இரவுகள்! எவ்வளவு மன வேதனைகள்! இதோ, தான் அல்லும் பகலும் எதிர்பார்த்திருந்த அந்தத் தருணம் நெருங்கி வந்து விட்டது! அவள் மிக அருகில் இருக்கிறாள்! அவளையும் தன்னையும் பிரிப்பது இந்த மதிலும் மாளிகைச் சுவரும்தான்! இவ்வாறு எண்ணுகையிலேயே அவன் உடம்பெல்லாம் ரத்த நாளங்கள் விரிந்து சூடேறியது.

"மதிலைக் கடந்து உள்ளே செல்ல இப்போது அனுமதி கிடைக்காது. நாம் வந்திருப்பதை வாயில் காப்போனிடம் பதிவு, செய்துவிட்டுப் போனால் அரசரின் வசதி அறிந்து நமக்குச் செய்தி அனுப்புவார்கள்" என்றான் ஜெயசிங்கன். இங்கும் இருவாசல் முதலிகளுக்கு ஜெயசிங்கனை நன்கு தெரிந்திருந்தது. "தாங்கள் இராத் தங்குவது வழக்கமான விடுதியில்தானே, ஐயா? விரைவில் தகவல் அனுப்புகிறேன்" என்றான்.

"மிக உயர்ந்த ரக அராபியக் குதிரைகளுடன் வந்திருப்பதாகச் சொல்லுங்கள்" என்றான் ஜெயசிங்கன்.

"ஆகட்டும் ஐயா, அராபியக் குதிரைகளுடன் ஓர் அராபியனையும் தாங்கள் அழைத்து வந்திருப்பதாகச் சொல்வேன்."





# ஆன்றோர் வாக்கு

பல பல வஸ்துக்களாகத் தோன்றுகிற இந்த ஜகத்தில் உள்ள எல்லாம் ஒன்றுதான்; அநேக பொம்மைகளுக்கு மண் காரணமாக இருக்கிறது. அநேக மிட்டாய்களுக்குக் காரணமாகச் சர்க்கரை இருக்கிறது. இப்படி உலகத்தில் உள்ள எல்லா வற்றுக்கும் மூலகாரணமாக இருப்பதைத்தான் 'எலிமெண்ட்' என்று தற்காலத்தில் விஞ்ஞானிகள் சொல்கிறார்கள். அவர்கள் சொல்வது அறிவில்லாத ஜடசக்தி. ஆனால் எல்லாவற்றுக்கும் மூலமாக இருப்பது, வெறும் சக்தி அல்ல; அறிவுக்குளெல்லாம் அறிவாக இருப்பது, ஆனந்தம் - ஆனந்தம் என்பது, எல்லாவற்றுக்குமே மூலமாக இருக்கிற ஆனந்த சமுத்திரமே அதுதான்.

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்

தொழிலாளியின் கை, தொழில் செய்யும் போது பரிசுத்தமாகிறது. சோம்பேறியின் மன விருப்பம் அவனையே கொல்கிறது. தொழில் எத்தனை அசுசியாக இருந்தாலும் அதைச் செய்வதில் அவமானமில்லை. சோம்பலொன்றுதான் அவமானம்.

—பாரதியார்

நந்தவனத்தில் உள்ள மலர்களைப் பார். அம்மலர்களைக் கண்டு உளம் குளிர்ந்து பாடும் பறவைகளையும் பார்! பறவை தானும் அந்த நந்தவனத்தில் ஓர் அம்சம், மலர்களைப் போல் என்று எண்ணிக் கொள்கிறது. அதைப் பின்பற்றி நீயும் அந்த நந்தவனத்தின் ஓர் அம்சமாகிவிடு. அங்குள்ள மலர்களோடும் பறவைகளோடும் ஒன்றியவனாக வாழப் பழகிக் கொள்!

—இக்பால்

திருமாலை உயிராகக் கொண்ட உலகத்திலே எந்த உயிரைப் பகையெனக் கொள்வது? எவ்வுயிரைத்தான் அந்நியமாகக் கருதுவது? உலகத்தார் அனர்த்தம் கண்டு ஆற்றாது கருணை காட்டுவது ஸ்ரீ வைஷ்ணவ தர்மம் என்பதை ராமானுஜரின் வாழ்க்கையும் குணாதிசயமும் செயற்கருஞ் செயல்களும் வற்புறுத்தியுள்ளன.

—பி.ஸ்ரீ. ராமானுஜர் முன்னுரையில்

சங்கீதம் மதத்தை ஆதாரமாகக் கொண்டது. இப்போதும் அது மதத்தில்தான் வேரூன்றி நிற்கிறது. சங்கீதம் நம்முடைய கலாசாரத்தின் முக்கியமான அங்கம்.

—ராஜாஜி

''நல்லது நண்பரே, போய் வருகிறேன், நாளை சந்திப்போம்'' என்று கூறி விடை பெற்ற ஜெயசிங்கன் மறுபடி குதிரை மேல் ஏறுமுன் தலைமைக் காவலனைத் தட்டிக் கொடுத்தான். அப்போது பொற்காசுகள் அடங்கிய ஒரு சிறு பை கைமாறுவதை அராபியனின் கூரிய பார்வையுடைய ஒரு கண் கவனித்தும் காணாதது போலிருக்க அவன் மனம் மட்டும் சிரித்தது. முத்தரையரின் ஊழியர்கள் அப்படியொன்றும் நேர்மைத் திறனுடையவர்கள் அல்ல! இது முத்தரையன் ஆட்சியில் நாம் காணும் சில பலவீனங்களுள் ஒன்று எனத் தனக்குத் தானே கூறிக் கொண்டான்.

அவர்கள் குதிரைகளை உந்தி மேலேசெல்ல யத்தனித்தபோது, தலைக்கு மேலே 'சடசட' வென்ற சத்தம் கேட்டுச் சற்றே திடுக்கிட்டு அண்ணாந்து பார்த்தனர். வேறொன்றுமில்லை, சில புறாக்கள்தான் பறந்து கொண்டிருந்தன என்பதைக் கண்டதும் புன்னகைத்தனர். வெண்மையும் இளம் பழுப்பு நிறமும் சாம்பல் நிறமும் கொண்ட புறாக்கள் உற்சாகமாகச் சிறகுகளை அடித்துக் கொண்டு வட்டமிட்டுச் சென்று உத்தமசீலி வசிக்கின்ற அந்த மாளிகையின் மேன் மாடத்தில் மெலிதான கைப்பிடிச் சுவர் மீது வரிசையாக அமர்ந்து ஒன்றையொன்று—பார்த்துக் கர்வத்துடன் கழுத்தை அசைப்பதும், ''க்கும், க்கும்'' என்று குமுறிச் சப்திப்பதுமாய் இருந்தன. பார்த்துக் கொண்டே இருக்கையில், ''அதோ! அதோ!'' என்றான் ஜெயசிங்கன். அவன் சுட்டிக் காட்ட அவசியமே இல்லாத படிக்கு அதே கணத்தில் விஜயாலயனும் அந்தக் காட்சியைப் பார்த்தான். அவன் இதயம் சரேலென்று நழுவி விழுந்து விட்டது போல் ஓர் உணர்வு! நெஞ்சமெல்லாம் வெறுமையாகிவிட்டது போல் ஒரு மயக்கம்! அடுத்த கணமே அவன் இதயம் 'இதோ நான் இருக்கிறேன்! முழுசாக இயங்கிக் கொண்டிருக்கிறேன்' என்று மெய்ப்பிப்பது போல் பலமாக அவன் மார்புக் கூட்டைத் தாக்க, தேகமெல்லாம் புது ரத்தம் வேகமுடன் பாய, கூரிய பார்வையுடைய அந்த ஒற்றைக் கண் 'என்ன பாக்கியம் செய்தேன்!' என்று பெருமிதத்தில் அகன்று விரிய, 'அவள் மேனியில் பட்ட காற்று என்மீதும் படுகிறது' என்று மெய் சிலிர்த்து, ரோமாஞ்சனம் உருவாக்க, அவளுடைய இயற்கையான நறு மணமும், வாசனைத் திரவியங்களின் நன் மணமும் கலந்த காற்றை நிரப்பிக் கொள்வதில் கர்வமுற்ற சுவாசப் பைகள் பேராசையுடன் நெடு மூச்சுக்களை எழுப்ப, அவன் அறிவு, ''பொய் பொய்! அத்தனை ஓவியங்களும் அத்தனை கவிதைகளும் நண்பன் ஜெயசிங்கன் கூறியதும் எல்லாமே பொய்! இவர்களுடைய வர்ணனைகளுக்கும், உவமைகளுக்கும் உருவகங்களுக்கும் மேம்பட்டதான இவளுடைய பேரெழில் கற்பனைக்கு எட்டாதது; சொல்லில் அடங்காதது; அதனால் தமிழே தோல்வியடைகிறது'' என்று வாதம் புரிய, அவனுடைய மனமோ எனில் அந்தப் புறாக்களுடன் தானும் பறந்து போய் அவள்

தோளில் அமர்ந்து நெஞ்சத்துள் புக அனுமதி கோரிக் கெஞ்சிக் கொண்டிருந்தது!

இத்தனைக்கும் அவளை அவனால் முழுமையாகப் பார்க்கவும் முடியவில்லை; தெளிவாகக் காணவும் இயலவில்லை. காரணம் அவளது இடைக்குக் கீழே உடல் பகுதியை மாடச் சுவர் மறைத்தது. இடைக்கு மேலே இருந்த பகுதியும் அருகில் இல்லாமல் சற்றுத் தொலைவில் உயரத்தில்தான் தென்பட்டது. ஆயினும் கண்ணுக்குப் புலனான அளவில் அந்த அழகுக் குவியலை அவன் அணு அணுவாக ரசித்தான்.

கார்மேகக் குவியலான அளக பாரத்தை அவள் அலங்காரக் கொண்டை இட்டு அதிலே தொடுத்த கதம்ப மலர்கள் தவிர தாமரை இதழ்களையும் செருகி அழகு படுத்தியிருப்பதையும் முத்துச்சரங்களால் அணி செய்திருப்பதையும் பார்த்தான். மழை மேகத்திலிருந்து அப்போதுதான் பூரணமாக வெளிப்பட்ட சந்திரனாக அவள் வதனம் ஒளிர்வதையும், மாலை மயங்கு முன்னரே அந்தத் தண்ணிலவுக் குளுமையில் தான் நனைவதையும் உணர்ந்தான். அந்தக் கண்கள்... வேல் விழிகள் அல்ல அவை! வேலுக்குக் கொல்லத் தான் தெரியும்; இவை உயிரூட்டும் கண்கள்! அவை வண்டுகளல்ல, கயல்களும் அல்ல, மான் விழிகளும் அல்ல! இவற்றுக்கெல்லாம் என்ன சக்தி இருக்கிறது? இவளுடைய கண்கள் அபார ஆற்றல் படைத்தவை. ஒரு பார்வை, ஓராயிரம் வீரர்களை உருவாக்கும்; இன்னொரு பார்வை அவர்களையே அடிமைகளாக்கி வீழ்த்தும்! ஒரு கடைக்கண் நோக்கின் அருள் ஒருவனைப் பேரறிவாளனாக உருவாக ஊக்குவிக்கும்; ஒரு கண் சிமிட்டல் அவனையே பித்தனாக்கிப் பிதற்றச் செய்யும்! சாம்ராஜ்யங்களைச் சமைக்கவும் உதவும்; சரியவும் வைக்கும். 'எங்கே என்னை ஏறிட்டுப் பாருங்கள்!' என்று உத்தரவு பிறந்தால் கூட நேருக்கு நேர் பார்க்கத் தயக்கம் உண்டாக்குகின்ற பிரகாசமான கண்கள் அவை! கூச்சத்தை மீறிப் பார்த்துவிட்டாலோ அந்த ஒளியின் மாயா சக்தி ஒருவனை முழுமையாக ஆட்கொண்டு விடும்! அவளுடைய எடுப்பான மூக்கை அலங்கரித்ததால் ஆபரணங்கள் பொலிந்தன. அமிழ்தூறும் அதரங்களோ தேன் சிந்தும் மாதுளை மலர்கள். 'என்னை அணுகும் துணிவு யாருக்கு உண்டு?' என்று கேட்பன போல் ஒரு முறுவலைத் தேக்கிய உதடுகள். பொன்னாபரணங்கள், முத்துச் சரங்கள் ஆகியவற்றின் பளுவைத் தாங்கியும் குனியாமல் கம்பீரமாக நிமிர்ந்து நிற்கும் எடுப்பான நீண்ட கழுத்து. நீர் அருந்தினால் கூட உள்ளே இறங்குவது தெரியுமோ என்று ஐயப்பட வைக்கும் பளிங்குத் தோற்றம். அகன்று விரிந்த ஆனால் மென்மையான, வெண்மையான தோள்கள். அரண்மனை வாழ்விலும், அரச போகத்திலும் வளம் பெற்று விம்மி உயர்ந்த மார்பகங்கள். இத்தனை செழுமையினிடையிலும் கட்டுப்பாட்டுடன் வெறுமையில் உழலும் இடை! அழகுத் தத்துவத்தின் மையக் கேந்திரம் இதுதான் என அறிவிப்பதே போல் மிருதுவான, அளவான வெண் பட்டு மேட்டின் மேல் அமைந்த நாபிச் சுழி.

ஓடும் ரயிலில் கொள்ளைக்காரர்கள் புகுந்து பிரயாணிகளின் உடைமைகளை அபகரிப்பது, அதிகமாகி வருகிறது. நாளுக்கு நாள் பெருகி வரும் இக் குற்றத்தைத் தடுக்க, ஏதோ நம்மாலான சில யோசனைகள்:

(1) ஒவ்வொரு பிரயாணியின் இரண்டு பக்கங்களிலும் ஒவ்வொரு போலீஸ்காரரை உட்கார வைக்கலாம். சட்டென்று பார்க்கும்போது, பிரயாணி தான் கைதி மாதிரி தெரிந்தாலும் பரவாயில்லை. எல்லாம் அவருடைய நன்மைக்குத்தானே!

(2) ஒவ்வொரு ரயிலிலும் ஒரு மொபைல் போலீஸ் ஸ்டேஷன் அமைக்கலாம். இதற்காக ஒரு கம்பார்ட்மெண்டையே ஒதுக்கிவிட வேண்டும். கவனிக்க: பெண்கள் பெட்டிக்கு அருகில் முழுக்க முழுக்கப் பெண்களாலேயே நிர்வகிக்கப்படும் பெண் போலீஸ் ஸ்டேஷன் அவசியம்.

(3) எல்லாக் கம்பார்ட்மெண்டுக்கும் கதவுகளே இல்லாமல் செய்துவிடலாம். கதவு இருந்தால் தானே கொள்ளைக்காரர்கள் அதன் வழியாக நுழைகிறார்கள்? எல்லாப் பிரயாணிகளும் இன்ஜினுக்குள் நுழைந்து, அதன் வழியாக கம்பார்ட்மெண்டுகளுக்குப் போகும்படி செய்துவிட வேண்டும். இறங்கும்போதும் அப்படியே!

(4) ஒவ்வொரு ரயிலுக்கும் நூறு மீட்டர் முன்னாலும் பின்னாலும் பைலட் ரயில்களை விடவேண்டும். ஆயுதம் தாங்கிய போலீஸார் இவற்றில் பிரயாணம் செய்யலாம். இதற்காக ஏற்படும் அதிகப்படி செலவைச் சமாளிக்க ரயில் கட்டணங்களை மீண்டும் உயர்த்தி விடலாம். அல்லது பிளாட்பாரம் டிக்கட் ரூ. 10 என்று அறிவித்துவிடலாம்.

(5) மாலை ஆறு மணிக்கு மேல் எந்தக் காரணம் கொண்டும் ரயில்கள் ஓடக் கூடாது என்று சட்டம் கொண்டுவந்துவிடலாம். மீண்டும், மறு நாள் காலை ஆறு மணிக்குத்தான் ரயில்கள் புறப்பட வேண்டும்.

(6) ஒவ்வொரு ரயிலிலும் தேசிய மயமாக்கப்பட்ட வங்கியின் கிளை ஒன்றைத் துவக்கலாம். இதற்காக ஓர் ஏர்-கண்டிஷன்ட் கம்பார்ட்மெண்ட் அவசியம் வேண்டும். பிரயாணிகள் ரயில் புறப்படு முன், தங்களுடைய நகைகள், கரன்சி நோட்டுகள் ஆகியவற்றை பாங்க் லாக்கரில் வைத்துவிடலாம். ஒரு முக்கியமான விஷயம்: ரயில் தாமதமாகப் போய்ச் சேரும் ஒவ்வொரு நிமிடத்துக்கும் பாங்க் ஊழியர்களுக்குக் கட்டாயம் ஓவர் டைம் அலவன்ஸ் கொடுத்துவிட வேண்டும்! - சத்யபாமா

# சில யோசனைகள்!



ஒரு கணம் அவன் இவர்களைப் பார்த்தான். ஓராயிரம் மின்னல்கள் விஜயாலயன் முன்னால். ஜெயசிங்கனை அடையாளம் கண்டு கொண்டான். கரம் கூப்பி வணங்கினான். பதில் வணக்கம் செய்தான் ஜெயசிங்கன். அந்தப் பண்பாடு அறியாதவன் போல் நடித்துச் சலாமிட்டான் விஜயாலயன். அராபியனை அவள் வியப்போடு பார்த்தாள். ஏதேதோ கேட்க நினைத்தாள். உரக்கப் பேசுவது தன் தகுதிக்கு உகந்ததல்ல என்றெண்ணியவளாகக் கைதட்டித் தோழியை அழைத்தாள்.

''நாளை அரண்மனை வருகிறோம்; சந்திக்கலாம்'' என்றான் ஜெயசிங்கன்.

'ஆகட்டும்' என்பது போல் தலையாட்டிய உத்தமசீலி தன் தோளில் இறங்கியிருந்த ஒரு வெண் புறாவைப் பற்றி வானை நோக்கி வீசிப் பறக்க விட்டாள்.

விஜயாலயன் குதிரையிலிருந்து கீழே இறங்கினான். மதில் மீது வந்தமர்ந்த ஒரு சாம்பல் நிறப் புறாவைப் பற்றினான். தடவிக் கொடுத்தான். முத்தமிட்டு வானில் ஏவினான். உத்தமசீலியின் கரத்திலிருந்து விடுபட்டுப் பறந்து சென்று ககனத்தில் வட்டமிட்ட புறாவை நோக்கி இவன் அனுப்பிய புறா சென்றது. இந்த ஆண் புறா அந்தப் பெண் புறாவை நெருங்கியது. கூடவே பறந்தது. மூவரும் வைத்த கண் வாங்காது பார்த்து நிற்க, சாம்பல், வெண்மையை அணைத்தாற்போல் சென்று, வற்புறுத்தி அழைத்து வந்து விஜயாலயனின் நீண்டிருந்த கரத்தில் அமர்த்தி விட்டுத் தானும் அமர்ந்தது! புறாக்களை இடக் கரத்தில் ஏந்தியவாறே நடந்து, வலக் கரத்தை மட்டும் பயன்படுத்திக் குதிரை மேல் லாகவமாக ஆரோகணித்த அராபியன், அண்ணாந்து பார்த்தான். பெருமிதத்துடன் புன்னகைத்தான்.

இப்போது தோழி ஒருத்தி உத்தமசீலியின் அருகிலிருந்தாள்.

ஜெயசிங்கன் சிரித்தபடியே சொன்னான்: ''வெற்றி என் நண்பனுக்குத்தான்!''

தோழி கேட்டாள் இடக்காக: ''அதெப்படி? வெற்றி பெற்ற புறாவே எங்களுடையது தானே?''

* ஜெயசிங்கன் இதனை அராபியனுக்குக் கூறி அவன் பதிலைக் கேட்டறிந்து கொண்டு மேலும் அதிகமாக நகைத்தவாறே சொன்னான்:

''கடன் வாங்கிய ஆண் புறாவைத் திருப்பிக் கொடுத்து விடுவதாகச் சொல்கிறான் என் நண்பன். ஆனால் அதனைப் பயன்படுத்தித் தான் வென்ற பெண் புறா தன்னுடையதே என்று வாதாடுகிறான். எனக்கும் நியாயமாகத்தான் படுகிறது!''

இதைக் கேட்ட உத்தமசீலி தன்னையும் மீறி உரக்க உடல் குலுங்கச் சிரித்தாள். அந்த அசைவுகளில் வான வில்லின் வண்ணச் சிதறல்களை விஜயாலயன் கண்டானெனில் கலீரென்ற நகையொலியோ வெள்ளிக் கிண்கிணி நாதத்தை விட இனிமையாக விளங்கி அவன் செவிகளில் புகுந்து இதய அரங்கை அடைந்து அங்கே ஆனந்த நர்த்தனமாடியது!

(தொடரும்)

# மாதம் ஒரு புத்தகம்

ஏப்ரல் மாத வெளியீடுகள் என எமது பார்வைக்கு வந்தவை மிகச் சிலவே. அவற்றுள் இலக்கியச் சிந்தனையின் சிறுகதைத் தொகுப்பொன்று. இதில் சென்ற ஆண்டின் சிறந்த சிறு கதையாகத் தேர்ந்தெடுக்கப் பட்டது ''அவன்''. பரிசு பெற்ற ஜெயந்தனுக்கு நம் மனமார்ந்த பாராட்டுக்கள். இவருக்குக் கல்கி நேயர்கள் சார்பில் ஒரு பேனா பால்பாய்ண்ட் செட் அன்பளிப்பாக வழங்குகிறோம்.



**ப**த்திரிகை என்ற ஜனரஞ்சகமான சாதனம் மூலம் நல்ல தரமான இலக்கியத்தை, சீரியஸான எழுத்தைக்கொண்டுவரமுடியும் என்பதை அண்மைக் காலத்தில் நிரூபித்துக் காட்டியவர்களுள் முக்கியமானவர் திரு ஜெயந்தன். இலக்கிய சிந்தனை பரிசு பெற்ற 'அவன்' சிறுகதை இதை உறுதிப்படுத்துகிறது.

பஞ்சாயத்து ஒன்றில்பணிபுரியும் கண்ணுச்சாமியின் மனைவி சம்பள தினத்தன்று மானேஜரைப் பார்க்க வருகிறாள். ''இன்னிக்கு சம்பளத்தை என் கையில் குடுங்க சாமி!'' என்று வேண்டுகோள் விடுக்கிறாள். மானேஜர் நேரிடையாகப் பதில் சொல்லாது 'பாவ்லா' காட்டுகிறார். கண்ணுச்சாமி வந்து, தன் மனைவியைப் பார்த்ததுமே முகம் கருங்கி விட்டது. அலுவலகத்துக்குள்ளேயே அவர்கள் சண்டை போடுகிறார்கள். கிராம சேவக், மனைவியின் உதவிக்குச் சென்று கண்ணுசாமியைத் தாக்கிப் போலீசில் புகார் செய்யும் போது மனைவி தடுக்கிறாள்.

''உசிரு இருந்தாத்தானே சாமி புத்தி வரும்? ஜெயில்லே போட்டா நாலு நாளையிலே செத்துப் போயிடும் சாமி. அங்க என்ன இருக்கு? எலும்பும் தோலும்தான் இருக்கு, சாமி...''

இறுதியில் கண்ணுச்சாமி தடுமாறியபடி எழுந்து சாராயம் விற்கிற கடைக்குச் செல்கிறான். மனைவி குழந்தைகளுடன் நடக்கிறாள்.

கதை இவ்வளவுதான். ஆனால் சொன்ன விதம் அபாரம். யதார்த்தம், யதார்த்தம் என்கிறார்களே அது இந்தக் கதை நெடுக விரவியிருக்கிறது. கமிஷனரைக் கண்டு மனைவி ஏதும் சொல்லாமல் தயங்குவது, கண்ணுச்சாமியின் முரட்டுத் தனம், மானேஜரின் 'நடு நிலைமை' — ஒவ்வொன்றும் தெள்ளத் தெளிவாக நேரில் காண்பது போல் சித்திரிக்கப் பட்டுள்ளது. மிக எளிய நடை; ஆழமான கதை. முடிக்கிற விதத்தைப் பாருங்கள்:

''...கண்ணுச்சாமி நிமிர்ந்து நிதானமாக இவளைப் பார்த்தான். நீண்ட பெரிய முறைப்பு ''ஆளு வச்சா அடிக்கிறே? இரு, வீட்டுக்குத் தாண்டி. வருவே, வா.''

—அவன் மெல்ல வெளியே நடந்தான். கூட்டம் விலகி வழி விட்டது. காம்பவுண்ட் வாயிலைத் தாண்டி வடக்கே திரும்பினான். அந்தத் திசையில்தான் கள்ளச் சாராயம் விற்கிற இடம் இருக்கிறது.''

'அவன்' — வானதி பதிப்பகம், சென்னை-17 விலை ரூ. 8.00.

இதர ஏப்ரல் மாத வெளியீடுகள்:

கலைமகள் பொன்விழாக் கதம்பம்: விலை ரூ. 20. கதை, நாடகம், கட்டுரை என்று ஐம்பது ஆண்டுகளின் சிறப்புத் தொகுப்பு.

கலைமகள் பொன்விழா மலர், கலைமகள் காரியாலயம், சென்னை-4.

பாலஜோதிடம் ஆண்டு மலர்: விலை ரூ. 18 ஸ்பிக் பில்டிங், சென்னை-32.

—'தமயந்தி'

சென்னையில் உள்ள ஐஸ் அவுஸ் என்னும் கட்டிடம் பதினெட்டாம் நூற்றாண்டில் கட்டப் பட்டது. ஐஸ் தயாரிக்கத் தெரியாத காலம் அது. அமெரிக்காவிலிருந்துதான் ஐஸ் தருவிக்கப்பட்டது. இப்படி அமெரிக்காவிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட ஐஸ் இந்தக் கட்டிடத்தில்தான் பாதுகாத்து வைக்கப்பட்டது. இதனால்தான் இந்தக் கட்டிடத்துக்கு ஐஸ் ஹவுஸ் என்று பெயர் ஏற்பட்டது.

ஆதாரம்: இந்தியன் எக்ஸ்பிரஸ்

தகவல்: கன்னிசா



# அரசியல் கவிதைகள்

சாருகேசி



மன்னையிலிருந்து சென்னைவரை
இன்னொரு பாதயாத்திரை
போகிறாராம் கலைஞர்.
எச்சரிக்கை:
மோர் என்று எண்ணி
வழியில் யாரும்
பினாயிலைக் குடிக்காதிருக்கட்டும்!





தெலுங்கு தேசத் தலைவர்
என். டி. ஆர் – ஷூட்டிங்கில்
கட்டைவண்டி ஓட்டினாராம்.
காளைமாடு விழுந்து
கட்டைவண்டி கவிழ்ந்ததாம்.
நடக்கிற ஆட்சியைக்
கவிழ்க்க நினைத்தால்
நான் ஓட்டுகிற வண்டி ஏன்
கவிழ வேண்டும்? – என்று கேட்கிறார்
என். டி. ஆர்

மேற்கு வங்கத் தேர்தலில்
வேட்பாளர்களையே
தூக்கிப் போய்விட்டார்களாம்.
வேட்பாளர் எல்லாருமே
கடத்தப்பட்டு, கட்டாயம்
ஜெயித்தும்விட்டால்,
அசெம்பிளி எத்தனை
அமைதியாய் இருக்கும்!
என்கிறார் நம்மூர்
வாக்காளர் ஒருவர்!



தமிழில் அர்ச்சனை
இப்போதே தொடங்கியாச்சு.
ஆனால் 'அர்ச்சனை'
பகவானுக்கு அல்ல.
பாவம் – சமஸ்கிருதத்துக்கு!

# வட்ட



# மேஜை

● எல்லா விதத்திலும் சிறப்பாக இருந்த இந்த ஆண்டு கல்கி விடுமுறை மலரில் இடம் பெற்ற விண்டல் கவிதைகள் ஐந்தும் தனிச் சுவையோடு இருந்தன. கல்கி விடுமுறை மலரல்ல, கோடையில் வந்த குளுகுளு மலர்!

பெங்களூர்—53 'சித்திரப்பிரியா'

● 'எச்சரிக்கை!' என்ற தலைப்பின் கீழ் சென்னையில் நடக்கும் சில ஏமாற்றுத்தனங்களை அம்பலப்படுத்தியிருக்கும் கல்கி இதழுக்கு என் நன்றி! அந்தக் குறிப்புக்கள் சென்னை வாழ் மக்களுக்கு மட்டுமல்ல! புதிதாகச் சென்னையைச் சுற்றிப் பார்க்க வருபவர்களுக்கும் பயனுள்ளதாய் இருக்கும்.

நெல்லிக்குப்பம். ரா. ஜோதிராமன்

● வங்க முதலமைச்சர் ஜோதி பாசு கொடூரமாக இளித்துஓட்டுக்கேட்பது போல் வந்துள்ள கார்ட்டூன் பார்த்து மனத்துக்குச் சங்கடமாக இருந்தது. பவர் கட் தவிர அவர் ஆட்சியில் களங்கம் கிடையாது. Non teaching staff வேலை நிறுத்தத்தினால் பள்ளி, கல்லூரிகள் ஒரு மாதம் மூடப்பட்டபோது, யுனிவர்சிடி, ப்ளஸ் டு பரீட்சைகள் தடைப்பட இருந்தன. நிர்ணயித்த தேதியில் ஒழுங்காக இடையூறுகளைக் களைந்து பரீட்சைகளை நிகழ வைத்தார். பிரச்னைகளை அலகவதில் 'ஜோதி' கெட்டிக்காரர்.

கல்கத்தா வெ. பாலசந்திரன்

● இந்திய உணவுக் கார்ப்பரேஷன் பற்றிய தலையங்கம் படித்தேன்.

ராஜாஜி அவர்கள் இ. எஸ். ஐ. கார்ப்பரேஷன் துவக்க விழாவின்போது கூறியது "Corruption, laziness and greed are on the watch to damn our administrative machinery and disappoint our people over any good project with a large amount of money behind it". அன்று ராஜாஜி அவர்கள் கூறியது எல்லா கார்ப்பரேஷனுக்கும் பொருத்தமாக உள்ளது.

ஹுப்ளி என். மணி

● இந்த வார இதழ் துணுக்கொன்றில் சபாநாயகர் ராஜாராம் அவர்கள் இந்தச் சட்ட மன்றக் கூட்டத்துக்குத் தொடர்ந்து எல்லா நாட்களும் கலந்து கொண்டதாக ஏழு உறுப்பினர்களைக் குறிப்பிட்டு இருந்தார். ஆனால் அவர்கள் பெயரைக் கூறவில்லை என்று இருந்தது. அது தவறு. அவரே பெயரையும் கூறியுள்ளார்.

ஆனூர் ஜெகதீசன், ஏ. வெள்ளைச்சாமி, ஆர். எஸ். முனிரத்தினம், ஜே. சி. டி. பிரபாகர், ஆர். சண்முகம், எம். கண்ணன், எஸ். டி. உக்கம்சந்த்.

திருச்சி—14 எம். நமச்சிவாயம்

● நாராயணசாமி நாயுடுவின் பேட்டியைக் கண்டேன். எனக்கும் கொஞ்சம் நிலம் உள்ளது என்ற முறையில் சொல்கிறேன். கூட்டுறவுக் கடன்களையும், கிஸ்தி, வரி போன்றவற்றையும் 3 பசலிகளாக வசூலிக்காமல் விட்டு விட்டார்கள். தற்சமயம் மொத்தத் தொகையாகக் கட்டும்போது சிரமமாக உள்ளது. ஜப்தி நடவடிக்கைகளில் அரசாங்கம் ஈடுபட்டால் குடும்ப கௌரவம் போய்விடுமே எனப் பயந்து நிலத்தை விற்றுக் கடனைச் செலுத்தினேன். மாநில அரசு மத்திய அரசையும், மத்திய அரசு மாநில அரசையும் குறை சொல்கிறார்கள். கடைசியில் பாதிப்பு எங்களுக்குத்தான்.

செம்பனூர்கோயில் ஆர். நாகராஜன்

● தன்னிறைவு பெற வேண்டும் என்பதற்காக அரசு கடன் வழங்கியதாக நாராயணசாமி நாயுடு கூறுகிறார். கடன் வழங்கித் தன்னிறைவு பெற்றதன் பொருள் உற்பத்தி அதிகரித்து விட்டது என்பதுதானே? அப்போதும் கடன் கட்டா விட்டால் எப்படி?

தற்போதைய தமிழக அரசு வட்டி முழுவதையும் தள்ளுபடி செய்ததுடன் அசல் கடனைப் பல தடவைகளில் கட்டவும் வழி செய்திருக்கிறது. விவசாயிக்குக் கடன் தந்து கடனாளியாக்க வேண்டாம் என்கிறார். பயிரிடும் சமயத்தில் பணம் கிடைக்காமல் அல்லல் படும் ஏழை விவசாயிக்கல்லவோ தெரியும் அந்தக் கடனின் அருமை.

செங்கவல்லி இ. முருகவேள்

● கைநீட்டிக் கடன் வாங்கிய எவரேயாயினும் நாயுடுவுக்கு ஜே போட்டுக் கடன் தந்தவர்களுக்கு நாமம் சாத்துங்கள்.

ஸத்யமேவ ஜெயதே!

தஞ்சாவூர் காந்தி ஆசிரமம் கிருஷ்ணன்

● விவசாயிகளின் பிரச்னையை நாராயணசாமி நாயுடுவின் பேட்டி விவரமாக விளக்கி விட்டது! ஆனால் புள்ளி விவரத்தில் ஒரு குறை உள்ளது! ஒரு குதிரை சக்தி மோட்டாருக்கு மாதம் ரூ. 50 கட்டவே இயலாது! சரியான தகவலைத் தலைவரிடம் கேட்டு வெளியிடவும்.

மருக்காலங்குளம் மருத. கா. பாண்டியன்

இந்தக் கடிதம் கிடைத்த அன்றே ஸ்ரீ நாராயணசாமி நாயுடு போனில் பேசி, 'நான் ஆண்டு ஒன்றுக்கு 50 ரூபாய் என்று சொன்னது தவறுதலாக மாதம் ஒன்றுக்கு 50 ரூபாய் என்று அச்சாகியிருக்கிறது' என்பதாகத் தெரியப் படுத்தினார். பிழை நேர்ந்ததற்கு வருந்துகிறோம். —ஆசிரியர்

# உள்ளும் புறமும் உயர்சிறப்பு




- ★ தனிச்சிறந்த ஃபாக்டரி ஸீல்
- ★ நீடித்த உழைப்பு
- ★ கசிவில்லாதது

## பிலிப்ஸ் பாட்டரிகள்

டார்ச்சு, டிரான்சிஸ்டர்களுக்கு உங்கள் முதல்
விருப்பம்; உலக தர எலக்டிரானிக்
பொருள்களைத் தயாரிப்போர் அளிக்கிறார்கள்.

பிலிப்ஸ்—ஐம்பது ஆண்டுகளுக்கும் மேலாக
இந்திய வீடுதோறும் விளங்கும் நம்பகமான பெயர்




## பிலிப்ஸ்

பைகோ எலக்ட்ரானிக்ஸ் அண்ட் எலக்ட்ரிகல்ஸ் லி.

# விஞ்ஞானப் பக்கங்கள்

## வீட்டுக்கு ஒரு கம்ப்யூட்டர்!



✖ மோனாவுக்கு, கம்ப்யூட்டர் வாத்தியார்





✖ அவுட் போஸ்ட் கண்டுபிடித்த 16 வயது வில்லியம்

சேகர் டியர்! அமெரிக்காவில் எதற்கெடுத் தாலும் . ப்யூட்டருக்கு அபிவாதயே சொல் கிருர்கள்.

–நீ இறந்து விட்டாய்; வாழ முடியாது என்று கம்ப்யூட்டர் சொன்னுல் நம்பிவிடும் மக்கள். மாணவர்கள் கம்ப்யூட்டரைக் கொண்டு அசைன்மெண்ட் செய்கிருர்கள். அதையே திரும்பக் கம்ப்யூட்டரிடம் கொடுக்க அதுவே திருத்திக் கிரேடு தருகிறது. நம்ப ஊர் காலேஜிலே பத்துப் பேருக்கு ஒரு ஆஸிலாஸ் கோப் கண்ணில் காட்டவே மூக் கால் அழுவார்களே. இங்கே ஒவ்வொரு மாணவனுக்கும் ஒரு கம்ப்யூட்டர்!

கம்ப்யூட்டர் கன்ட்ரோல் கார், கம்ப் யூட்டர் மெயில் புரோகிராம் செய்யப்பட்ட அடுப்பு, செடிகளைக் கவனித்து நீர் ஊற்றும் தோட்டக்கார கம்ப்யூட்டர், புரோகிராம் செய்யப்பட்ட டி. வி. என்று எதிலும் எங்கும் கம்ப்யூட்டர்.

கம்ப்யூட்டர் என்றதும் நம் காலேஜில் இருக்கிற மாதிரி பெரிய அறையில் குட்டி ராட்சதன் மாதிரி குளிரான ஏ. ஸி. சகத்தில் இயங்கின கம்ப்யூட்டரை நினைத் துக்கொள்ளாதே. அதே வேலைகளை மைக்ரோ புராசசர் எனப்படும் நகத்தை விடச் சின்ன சிலிக்கான் சிப்பில் அடக்கி விட்டார்கள்.

இப்போது அமெரிக்கா முழுவதும் பர்சனல் கம்ப்யூட்டர்கள் எனப்படும் பிரத்தி யேகக் கம்ப்யூட்டர்கள்தான். இவை நாம் என்ன சொல்கிருேமோ அந்தக் குறிப்பிட்ட வேலை





மட்டும் செய்யும். சின்ன சூட் கேஸ் அளவு தான். இந்த வருடம் மட்டும் 30 லட்சம் பிரத்தியேகக் கம்ப்யூட்டர்கள் அமெரிக்காவில் மட்டும் விற்றுள்ளன. 1985க்குள் 5 கோடி கம்ப்யூட்டர்கள் உலகம் பூரா விற்று விடுவார்களாம். உருவில் சிறிதாகி வரவர சக்தி கூடிக்கொண்டே போகிறது.

1500 ரூபாயிலிருந்து லட்சக் கணக்கான ரூபாய் வரையிலும் விலை போகிறது. 1500 ரூபாய்க்கு வாங்கி பயன்படுத்திய பின் தூக்கிப் போட்டு விடுகிறார்கள். ஒரு வீட்டில் அப்பா தனது பிரத்யேகக் கம்ப்யூட்டரில் ஆபீஸ் பட்ஜெட்டைப் போட்டுப் பார்க்கிறார். அம்மாவோ கம்ப்யூட்டரிடம் இன்னின்ன காய்கறிகள் உள்ளன, எப்படிச் சமையல் செய்யலாம் என்று குறிப்புக்கேட்கிறாள்., அக்கா தனது கம்ப்யூட்டருடன் செஸ் விளையாடித் தோற்கிறாள். தம்பி 4+4=8 என்று கூட்டுகிறான்.

பள்ளிக்கூடங்களில் கம்ப்யூட்டர் தான் வாத்தியார். இந்த வாத்தியார் அடிக்க மாட்டார். எத்தனை தரம் சந்தேகம் கேட்டாலும் சலிக்காமல், முகம் சுளிக்காமல் பதில் சொல்வார். அதனால் மாணவர்களுக்கு கம்ப்யூட்டர் வாத்தியாரைத்தான் பிடிக்கிறது.

இத்தனை அதிசயங்களுக்கும் காரணம் புரோகிராம். ஒவ்வொரு வேலைக்குமான புரோகிராம்களைத் தனிப்பட்ட முறையில் டேப்பில் பதித்து விற்கிறார்கள்.

டென்னிஸ் விளையாடணுமா அதற்கான தனி புரோகிராம் பேக்கேஜ். கதை எழுதணுமா? தனி பாக்கேஜ். ஜோஸ்யம் சொல்லணுமா? தனி புரோகிராம். பயனைப் பொறுத்துப் புரோகிராம் எனப்படும் Software packageன் விலை மாறும். கோடிக் கணக்கான பணம் இந்தத் தொழிலில் புரள்கிறது. ஒரு புரோகிராமைப் பிறர் பயன்படுத்த முடியாதபடி லாக்கிங் முறைகளை உபயோகிக்கிறார்கள். வியாபார ரகசியங்கள்.

பள்ளிக்கூட அளவிலேயே மாணவர்களுக்கு கம்ப்யூட்டர் புரோகிராம் எல்லாம் சொல்லித் தருகிறார்கள். வில்லியம் என்கிற பதினாறு வயதுப் பையன் அவுட் போஸ்ட் என்ற விளையாட்டைத் தானே கண்டு பிடித்து அந்தப் புரோகிராமுக்கு இந்த வருடம் மட்டும் 6 லட்சம் ரூபாய் ராயல்டி வாங்கியிருக்கிறான்.

கம்ப்யூட்டர்களுக்கு 1, 0 என்ற இரண்டு எண்கள்தான் தெரியும். அதை வைத்தே அதனை வளைத்து, நெளித்து வேண்டியவற்றை சாதித்துக் கொள்கிறார்கள். இந்த வேகம் எங்கு போய் முடியுமோ தெரியவில்லை. அமெரிக்க வாழ்க்கை கம்ப்யூட்டர் இல்லாவிடில் ஸ்தம்பித்துவிடும்.

நான் கோர்ஸ் முடித்து வரும்போது உனக்கு ஒரு கம்ப்யூட்டர் செய்து கொண்டு வருகிறேன். — எவ்வளவு நம்பிக்கை பார் எனக்கு. ஆமாம் சிந்துவுக்குக்கூட நீ இன்னும் பதில் போடவில்லையாமே. அடுத்த வாரம் போய்ப் பார்ப்பேன். அதற்குள் பதில் போட்டுவிடு. அடுத்த லெட்டரில் உனக்குப் பிடித்தமான விஷயம் பற்றி எழுதறேன். அமெரிக்காவின் அபாரமான பெண்கள்!

பிரியமுள்ள கோவிந்த்

(படங்கள்: பி.எச்.பி., டைம்)








# கவர்ச்சிகள்

## கிருஷ்ணமணி

### 8

இளமையின் துடிப்பும், வேகமும் ராமநாராயணனின் நடையில் இருந்தன. அவன் ஸ்ரீரங்கத்திலிருந்தும் திருச்சி மெயின் கார்ட் கேட் வரைக்கும் நடந்து வந்தான். பசி வயிற்றைக் கிள்ளியது. தாகம் எடுத்தது. கையில் காலணாக் காசுகூட இல்லாத நிலை. சில நிமிடங்கள் அவனுக்கு ஒன்றுமே தோன்றவில்லை. திருச்சி டவுனில் அவனுக்குத் தெரிந்த பையன்கள் சிலர் இருந்தனர். முதலில் அவர்களில் யாரையாவது சென்று பார்க்கலாமா என்றுகூட எண்ணினான். பிறகு அந்த எண்ணத்தைக் கைவிட்டான். இரவு மணி ஒன்பது என்பதை டாங் டாங் என்று ஓசையின் மூலம் அறிந்தான். அந்த இரவு அவன் வாழ்க்கையில் ஒரு திருப்பு முனைக்கு அத்தியாவசியமான ஒரு தீர்மானத்தை அவனுள் மேற்கொள்ள ஒரு சுய வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்ததாகத் தோன்றியது.

மெயின் கார்ட் கேட்டைத் தாண்டிச் சற்றுத் தொலைவில் பாரம் ஏற்றிய லாரிகள் நான்கைந்து வரிசையாக நின்று கொண்டிருந்தன. அந்த வண்டிகளை ஓட்டுபவர்கள் இரவுச் சாப்பாட்டுக்காக அங்கிருந்த உணவு விடுதிகளுக்குச் சென்றிருந்தனர் போலும். ராமநாராயணன் லாரிகளின் பக்கமாகப் போனான்.

லாரியொன்றின் பானட்டைத் தூக்கி வைத்து அவனுடைய வயதையொத்த ஒரு பையன் வாளியொன்றிலிருந்து தண்ணீரை ஊற்றிக் கொண்டிருந்தான்.

'சனியன் பிடிச்ச காச்சல் வேலை செய்ய முடியல்லே நானே மெட்ராஸ் போறதுக்குள்ள சீவனே போயிரும் போலிருக்கு' என்று முணுமுணுத்தான். அந்தப் பையனின் சட்டையிலும் அரை நிஜாரிலும் லாரியின் எண்ணெயும், அழுக்கும் தாராளமாகப் படிந்திருந்தன.

ராமநாராயணன் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு கேட்டான்: 'உனக்கு ஒடம்பு சரியில்லையா?'

அவன் இவனைப் பார்த்தான். உடனே பதில் சொல்லவில்லை. நீ யாரடா என்னைக் கேட்க என்பதுபோலிருந்தது அவன் பார்வை. பிறகு என்ன தோன்றிற்றோ, சற்று எரிச்சலுடன் பதில் சொன்னான்: ''ஆமாம்! நீ இப்போ அதுக்கு என்ன செய்யப் போறே?''

''அந்த வாளியைக் கொடு. தண்ணி கொண்டு வந்து நான் ஊத்தறேன்.''

''நெசம்மாவா?''

''நெசமாத்தான்.''

''உன்னைப் பார்த்தாப் பாப்பாரப் பிள்ளை மாதிரித் தெரியுதே?''

''ஆமாம்! அதனாலென்ன, சிக்கா இருக்கிற ஒருத்தனுக்கு உதவி செய்யக் கூடாதா?''

இப்பொழுது அவன் கண்கள் ஆச்சரியத்தைக் காட்டின.

''நீ படிக்கிறியா?''

''இல்லே!''

''பின்னே?''

''வேலை தேடிக்கிட்டிருக்கேன்.''

''என்ன வேலை?''

''எந்த வேலையாயிருந்தாலும் பரவாயில்லே.''

''ஏன், நீ படிக்கலியா?''

''படிச்சிருக்கேன்.''

''அப்போ ஆபீசிலே ஏதிலேனுச்சும் போய்க் கேக்க வேண்டியதுதானே?''

''கேட்டா உடனே தந்துடுவாங்களாக்கும்?''

''ஏன் தரமாட்டாங்களா?''

''சிபாரிசு வேணும்!''

''உங்க ஐயா, அண்ணன் இவுக யாரும் சிபாரிசு தேட மாட்டாங்களா?''



''எனக்கு ஐயா இல்லே. செத்துட்டாரு. அண்ணன் அண்ணி பேச்சைக் கேக்கிறவரு.''

''ஓகோ! அப்படியா விசயம்? நீ கோவப் பட்டுக்கிட்டு வீட்டை விட்டு வந்திட்டியாக்கும். நம்ம கேஸுதான். நான்அப்பிடித்தான் ஓடியாந்திட்டேன். கன்யாகுமரிகிட்ட எங்க ஊரு. ஒரு நா ராப்பொழுதிலே எங்க அண்ணி பேச்சைக் கேட்டுக்கிட்டு எங்கண்ணன் என்னைக் கன்னத்திலே லாவிட்டாரு. போய் யான்னு வந்தவன்தான். வருசம் நாலாச்சு. இன்னும் அந்த மண்ணை மிதிக்கல்லே. லாரிலே கிளீனரா இருந்துக்கிட்டிருக்கேன். வயித்தைக் கழுவிக்கிட்டுப் போறது. ஒண்ணு ரெண்டு மீறும். அதைச் சில்லறைச் செலவுக்கு வச்சிப்பேன்.''

சொல்லிவிட்டு இவனை மிகவும் ஆதங்கத்துடன் பார்த்தான். அவன் பார்வையில் அவர்கள் இருவருக்குமிடையில் இருந்த சமுதாய பேதங்கள் கரைந்து போய் ஒரு சகாவைப் பார்ப்பது போன்ற அந்நியோன்யம் தென்பட்டது.

''டிரைவரண்ணே வரட்டும் சொல்லிப் பாக்கிறேன்!''

''எனக்கு மெட்ராஸ் போகணும்!''

''திருட்டு ரயில் ஏறமாட்டியோ?''

''பழக்கமில்லே.''

கிளீனர் பையன் சிரித்தான்.

''ஏற்படுத்திக்கிட்டாப் பழக்கமாயிடுது. நான் அப்படித்தான் மெட்ராஸ் போனேன். இப்போ எனக்கு எங்க ஊர்ப் பேச்சே மறந்திட்டது. பல ஊர்களுக்குப் போயிருக்கேன். மெட்ராஸ் மாதிரி ஆகிடாது எந்த ஊரும்.''

''டேய் மருதுபாண்டி! என்னடா பேசிக்கிட்டிருக்கே!...கரகரத்த குரல். குரல்




வந்த திக்கைப்பார்த்தான் ராமநாராயணன். கைலியும், காக்கி அரைக் கைச் சட்டையும் அணிந்து நாற்பது வயது மதிக்கத் தக்க ஓர் ஆள் வந்து கொண்டிருந்தான். அவன் வாயில் பெரிய சுருட்டு ஒன்று எரிந்து கொண்டிருந்தது. சட்டைப் பையில் நிறையக் காகிதங்கள். அலுமினிய உறை போட்ட ஒரு பென்சில். புஸ்தி மீசை. கண்கள் ரத்தச் சிவப்பாக இருந்தன. நடத்

தர உயரம். சரியான பருமன். புகையை இழுத்து அந்த ஆள் விட்டதும் இவனுக்குக் கொல்லன் துருத்தி நினைவுக்கு வந்தது.

''தம்பி யாரு!''

''நம்ம கேஸ் போலத்தான் அண்ணே!''

''என்னடா பெரிய கேஸைக் கண்டுக் கிட்டே! என்ன வேணும் தம்பி உனக்கு?''

''மெட்ராஸ் போகணுமாம்!''

''போகட்டுமே!''

''வூட்லே கோவிச்சிக்கிட்டு வந்திட்டதாம்''

''ஏன் தம்பி! அப்பிடியா? உன்னைப் பார்த்தா அய்யமாரு பிள்ளை மாதிரி தெரியுதே!''

''பாப்பாரப் பையன்தான்!''

''டேய்... டேய்... இருடா! குறுக்கே விழுந்து பேசாதேடா! ஒம் பேரு என்ன தம்பி!''

''ராமன்!'' .

''ம்.... படிச்சிருக்கல்லே. கோலம்லாம் சரியில்லே. வூட்டுக்குப் போயிடு!''

இவன் மௌனமாய் இருந்தான்.

''எனக்குக் காச்சலடிக்குதண்ணே. இவனைக் கூட்டிக்கிட்டுப் போகலாம்!''

''டேய்! என்னடா இது எளவு! நாளைக்கு அவுங்க வூட்லே போலீஸ்லே ரிப்போர்ட் செஞ்சா நாம மாட்டிக்குவம்டா!''

இப்பொழுது தான் பேச வேண்டிய அவசியத்தை ராமநாராயணன் உணர்ந்தான்.

''எனக்குப் பதினெட்டு வயசாயிடுச்சி. யாரும் ரிப்போர்ட் செய்ய மாட்டாங்க. வேலே தேடிக்காம வீட்டுக்குப் போறதில்லேங்கிற சபதம் போட்டுட்டு வந்திருக்கேன். எந்த வேலேயாயிருந்தாலும் செய்யத் தயாரா இருக்கேன். தயவு செஞ்சி என்னை மெட்ராஸ் வரைக்கும் கொண்டு போய் விட்டுடுங்க!''

''ம்....! திருச்சியிலே வேலே கெடைக்கல்லியோ?''

''எனக்கு ஸ்ரீரங்கம். நான் இங்கே இருந்தா அது வீட்டுக்குத் தெரிஞ்சிடும். அதை நான் விரும்பல்லே!''

''ம்.... ரொம்ப ரோசக்காரனா இருப்பே போலிருக்கே! சரி வா, பார்ப்பம். கேபின்லே குந்தக் கூடாது. லாரி பின்னாலே ஏறிக் குந்து. வாழை இலேக் கட்டுங்க கொத்தவால் சாவடிக்குப் போவுது. இலேயை நாசம் பண்ணிடாதே. தூக்கம் முழிப்பியா?''

''ம்.....''

''அப்போ மருது அதிலே படுக்கட்டும். நீ இங்கே குந்து!''

மருது பாண்டிக்கு ஒரே குஷி! டிரைவர் இவ்வளவு சுலபத்தில் இணங்குவார் என்று அவன் எதிர்பார்க்கவில்லே. யதேச்சையாகக் கேட்டான். ''ராமா! நீ வவுத்துக்குச் சாப்பிட்டியா?'' இல்லேயென்ற பாவனையில் இவன் தலேயசைத்தான்.

''அண்ணே காசு கொடுங்கண்ணே! ரெண்டு பேரும் இட்லி துன்னுட்டு வர்றோம்.''

டிரைவர் இடுப்பில் கட்டியிருந்த பட்டையான பெல்ட்டில் தைக்கப்பட்டிருந்த பர்ஸிலிருந்து சில்லறைக் காசை எடுத்தான். ''டேய், மருது பாண்டி! காச்சலடிக்குதுங்கிறே, இட்டிலி தவிர வேற எதுவும் துன்னாதே. இவனுக்கும் வாங்கிக் குடு. எட்டணா போதுமா?''

''இன்னும் ரெண்டணா குடுங்கண்ணே!''

''போடா! உளுந்தூர்ப் பேட்டையிலே வாங்கிக்க!''

''சரிண்ணே!''

''ராமா வா!''

பேசாமல் சென்றான்.

அன்று இரவு அவனுடைய எதிர்காலம் நிச்சயிக்கப்பட்டு விட்டது. வாழ்க்கையில் எப்படியும் வாழ்ந்தே தீருவது என்ற உறுதி மட்டுமிருந்தால் போதாது. சந்தர்ப்பச் சூழ் நிலேக்கேற்ப, சந்திக்கும் நபர்களுக்கேற்ப, நடந்து கொள்ள வேண்டும். பிறப்பினால் உயர்ந்தவன், தாழ்ந்தவன் என்பது முற்றிலும் சரியல்ல. எல்லாவற்றுக்கும், எல்லா நிலேகளுக்கும் அடிப்படையான வலு பொருள் சம்பாதிப்பதில்தான் இருக்கிறது. படித்த அண்ணன் சாப்பிடாமல் வந்த தன்னைத் தடுத்து நிறுத்தவில்லே. ஆனால் இங்கோ முற்றிலும் புதியவர்களான, படிக்காதவர்களான இரண்டு பேர்கள் தன் நிலேமைக்கு இரங்கித் தனக்கு உதவி செய்ய அன்புக் கரம் நீட்டுகிறார்கள். மனிதாபிமானம் என்பது இவனிடத்தில்தான் இருக்கும் என்று நாம் கணிப்பது கூடச் சரியல்ல. பார்ப்பதற்குக் கசாப்புக் கடையில் ஆட்டிறைச்சியைக் கூரிய வாளால் துண்டு போடும் ஒருவனைப் போல் பார்த்த மாத்திரத்திலேயே அச்ச உணர்வைத் தூண்டும் முக அமைப்பும், முரட்டுத் தேகமும் கொண்ட ஒரு லாரி டிரைவரின் மனத்திலே மனிதாபிமானம் இருக்கிறது. வெளித் தோற்றத்திற்கும், உள் மனநிலேக்கும் சம்பந்தமே இல்லே போல் தோன்றியது. அவனுக்குத் தன் எதிர்காலத்தைப் பற்றிய நம்பிக்கை ஒளியின் கீற்று அந்தக் கணத்திலேயே தெரிந்தது போலிருந்தது. (தொடரும்)

''நீங்கள் என்னை வீட்டில் சந்திக்க வருவதானால், காலே 6-30க்குள் வந்து விடுங்கள். இல்லாவிட்டால் 6-45க்கு மேல் வாங்க''

''நடுவில் 15 நிமிஷம் என்ன?''

''ஹி... ஹி... அதுதான் எனக்குக் காப்பி டயம்'' -அ. கிருஷ்ணசங்கர்

# புத்துணர்ச்சிதரும் தூய சுவாசம்...
# உறுதிமிக்க, ஆரோக்கியமான பற்கள்



## அளித்திடுதே கோல்கேட் டென்டல் க்ரீம்

ஒவ்வொரு சாப்பாட்டிற்குப் பிறகும் கோல்கேட் கொண்டு உங்கள் பற்களைப் பிரஷ் செய்யுங்கள். உலகெங்கும் பல் டாக்டர்கள் சிபாரிசு செய்வதைப் போலவே அது உங்களைப் பாதுகாக்கிறது.

உங்கள் பற்களுக்கிடையே தங்கியுள்ள உணவுத் துணுக்குகளில் பாக்டீரியாக்கள் வளர்கின்றன. இவை வாய் துர்நாற்றத்தையும், பிறகு வலிமிக்க பற்சிதைவையும் உண்டாக்கும்.

எனவே சாப்பிட்டு முடித்தவுடனேயே கோல்கேட் முறையில் பற்களைப் பிரஷ் செய்யுங்கள். அது புத்துணர்ச்சியுடன் இனிய சுவாசத்தைத் தருவதற்கும், பற்களுக்கு வெண்மையளிப்பதற்கும், பற்சிதைவை எதிர்ப்பதற்கும் மிகவும் சக்தி வாய்ந்தது என்று நிரூபணமாகியுள்ளது.

**கோல்கேட்டின் புத்துணர்ச்சி தரும், பெப்பர்மின்ட் சுவை பல்துலக்குவதை ஒரு இன்ப அனுபவமாக்குகிறது.**

**நம்பகமான, கோல்கேட்டின் செயல் புரியும் முறை**



உணவுத் துணுக்குகள் பற்களுக்கிடையே சிக்கிக் கொள்வதால் துர்நாற்றத்தையும், பற்சிதைவையும் உண்டாக்கும் பாக்டீரியாக்கள் வளருகின்றன.



கோல்கேட்டின் ஒப்பற்ற, செயல்புரியும் நுரை ஆழ ஊடுருவிச் சென்று உபாதை தரும் உணவுத் துணுக்குகளையும் பாக்டீரியாக்களையும் அகற்றி விடுகிறது.



பளிச்சென்று வெண்மையான பற்கள், தன்னம்பிக்கை தரும் இனிய சுவாசம், பற்சிதைவுக்கெதிராகப் பாதுகாப்பு.

## கோல்கேட் டென்டல் க்ரீம் உபயோகித்து வாய்துர்நாற்றத்தைத் தடுத்திடுங்கள் பற்சிதைவை எதிர்த்திடுங்கள்




DC-G-74 TM

# கல்யாண் ஸ்டேஷனில் கடைசியாக இறங்கியவன்!




கல்யாண் ஸ்டேஷன்.

இரவு பதினொரு மணிக்குச் சோம்பலாய் ஸ்டேஷனுக்குள் நுழைந்த மின்சார ரயிலிலிருந்து கடைசி ஆளாய் உதிர்ந்தேன். பிளாட்பாரம் முழுவதும் பாலைவன அமைதி உட்கார்ந்திருக்க, மெல்ல நடந்து வெளியே வந்தேன். எதிரே இருந்த தியேட்டரின் முகப்பிலிருந்து அமிதாப்பச்சன் கையில் மெஷின் கன்னோடு என்னை முறைப்பது தெரிந்தது. பொருட்படுத்தாமல் நடந்தேன்.

கல்யாண் – ஊர் வெகுவாய் அடங்கியிருந்தது.

'கன்யாலால் பத்து மணிக்கே வரச்சொன்னான். பாழாய்ப்போன ஹோட்டலில் வேலை முடியவே பத்து மணியாகி விட்டது. இப்போது பங்களாவுக்குப் போனால் கன்யாலால் இருப்பானா?'

மனசுக்குள் ஒரு தவிப்பு அலை பாய – சட்டையின் பாக்கெட்டிலிருந்து அந்தத் துண்டுச் சீட்டை உருவித் தெரு விளக்கின் வெளிச்சத்தில் மறுபடியும் ஒரு தடவை படித்தேன்.

'கன்யாலால்-பீவாண்டி மெயின் ரோடில் ஏழாவது கிலோ மீட்டர் கல் அருகே இறங்கி பக்கவாட்டில் பிரியும் செம்மண் பாதையில் அரை கிலோ மீட்டர் தூரம் நடந்து வந்தால் தெரியும் முதல் பங்களா. பச்சைப் பல்லி பங்களா. காம்பௌண்ட் கேட்டில் பெரிதாய் இரண்டு பல்லிகள் பச்சை நிறப் பெயிண்டால் வரைந்திருக்கும்.'

இரண்டு மூன்று தடவை அடையாளம் சொல்லி – மறந்து விடாமல் இருக்க, துண்டுச் சீட்டில் எழுதிக் கொடுத்திருந்தான் கன்யாலால்.

இப்போது அந்தப் பச்சைப் பல்லி பங்களாவுக்குத்தான் போய்க் கொண்டிருக்கிறேன்.

நான்?

என்னைப் பற்றிச் சொல்ல வேண்டியது நிறைய இருந்தாலும், சுருக்கமாய்ச் சொல்லி விடுகிறேன். பெயர் ராஜமாணிக்கம். வயது அடுத்த மாதம் இருபதாம் தேதியோடு முப்பது ஆரம்பமாகப் போகிறது. படிப்பு: பி. ஏ. எகனாமிக்ஸ் (கையில் முழுசாய் ஒரு ரூபாய்த் தான் இல்லை) இனி குடும்பத்துக்கு வருவோம். அம்மா? ஐந்து வயதில் என்னை நர்சரிக்கு அனுப்பிவிட்டு நான் மத்தியானம் சாப்பிட வருவதற்குள் கழுத்தில் பூமாலையோடு சுவரில் சாய்ந்து விட்டவள். அப்பா? நிறையக் குடித்துக் கொண்டு தன்னைவிட இருபது வயது இளைய மலையாளப் பெண்ணின் கழுத்தில் தாலியைக் கட்டி – வருஷா வருஷம் அவளை மெட்டர்னிடி வார்டில் அட்மிட் செய்து இந்தியாவின் ஜனத்தொகையை உயர்த்துவதில் தீவிரமாக ஈடுபட்டிருப்பவர். நான் பம்பாய் வந்த நோக்கம்? ஒரு வேலையைத் தேடிக்கொள்ள! நிஜமான நோக்கம்?



அப்பாவின் கண்களில் படாமல் இருக்க! அப்பா விதைக்காக வைத்திருந்த ஆயிரத்துச் சொச்சம் பணத்தை எடுத்துக் கொண்டு பெங்களூர் மைசூர் போய் விஸ்கிக்கும், 'விமலா, கமலா'க்களுக்கும் தாரைவார்த்து விட்டு வந்தால் அவருக்குக் கோபம் வராதா? வந்தது. கையில் கிடைத்ததை எடுத்து என்னைச் சாத்துவதற்குள் ப்ளாட்பாரத்தில் ஏறி மெட்ராஸ் வந்து, மெட்ராஸிலிருந்து தாதர் எக்ஸ்பிரஸின் உபயத்தால் பம்பாய் மண்ணை மிதித்தேன். ஊரை விட்டு ஓடிவருகிற என்னைப் போன்ற உதவாக்கரைகளுக்கு முதலில் கிடைக்கிற உத்தியோகம் ஓட்டலில் சர்வர் உத்தியோகம். தாதரில் டாக்டர் சில்வா ரோட்டில் இருக்கும் ஒரு உடுப்பி ஹோட்டலில் 'ஏக் மசாலா தோசேய்' குரல் கொடுக்க ஆரம்பித்தேன்.

மூன்று வேளை வயிறு என்னவோ நிறைந்து விடுகிறது என்றாலும், பம்பாயின் பகட்டான செலவுகளுக்கு நான் வாங்கும் சம்பளம் காற்றில் வைத்த கற்பூரமாய் மாறியது. மாசத்தில் ஒரு நாள் ஐந்து ரூபாயைக் கையில் எடுத்துக் கொண்டு போய் ஜி. டி. ரோட்டில் இருக்கும் சிவப்பு விளக்கு பகுதியில் கரைத்துக் கொண்டு வருவேன். அப்போது அறிமுகமானவன்தான் இந்தக் கன்யாலால்.

''தினசரி ஜி. டி. ஸ்டேஷனுக்குப் போ. வீட்டை விட்டுக் கோபித்துக் கொண்டு தினசரி ஒரு பெண் வந்து ஏதாவது ரயிலிலிருந்து இறங்குவாள். அவளை மடக்கு. நைச்சியமாகப் பேசி என்கிட்டத் தள்ளிக்கிட்டு வா. உனக்கு ஐந்நூறு ரூபாய் அந்தநிமிஷமே கிடைக்கும்.''

கன்யாலால் சொன்ன இந்தத் தொழிலைச் சிரமேற்கொண்டு செய்ய ஆரம்பித்தேன். இதுவரை மூன்று பட்சிகளைப் பிடித்துக் கன்யாலாலுக்கு விற்றிருக்கிறேன்.

இப்போது கிடைத்திருப்பது நாலாவது பட்சி.

சினிமாவில் நடிக்க ஆசைப்பட்டு சாங்லி கிராமத்திலிருந்து தனியே புறப்பட்டு பம்பாய் வந்து என்னிடம் மாட்டியிருந்தாள். என் அறையில் இருக்க வைத்துவிட்டு கன்யாலாவிடம் விஷயத்தைச் சொல்ல இதோ புறப்பட்டுப் போய்க் கொண்டிருக்கிறேன்.

**த**னியான பங்களா.

பூமியைக் கீறிக்கொண்டு புறப்பட்டாற் போல் எழும்பியிருந்தது.

இதுதான் பச்சைப் பல்லி பங்களாவா?

வேகமாய் பங்களாவை நோக்கி நடக்க ஆரம்பித்தேன்.

அப்போதுதான் அந்தக் காட்சி என் கண்ணில் பட்டது. பங்களாவின் மேல் தள மொட்டை மாடியில் ஓர் உருவம் மசமச வென்று தெரிந்தது. அந்த உருவம் கைகளை அகலப் பரப்பிக் கொண்டு தயங்கித் தயங்கி மொட்டை மாடியின் விளிம்பை நோக்கி நகர்ந்து — நகர்ந்து....

நான் பார்த்துக் கொண்டிருக்கையிலேயே அந்த உருவம் மொட்டை மாடியிலிருந்து தலைகுப்புற விழ ஆரம்பித்தது.

சட்டென்று நின்றேன். நெஞ்சில் ஏதுவோ ஒன்று பயத்தில் அப்பிக்கொண்டது. பார்த்தது பிரமையா...? இல்லை. நிஜமாகவே ஓர் உருவம் விழுந்ததா?

நெஞ்சு தடதடக்க ஆரம்பித்தது. என் கால்கள் துவைத்த துணியாய்த் துவள ஆரம்பித்தன. வியர்வை உடம்பு முழுதும் ஊற — திரும்பி விடலாமா என்று யோசித்தேன்.

மனசின் ஒரு மூலையில் பலவீனமாய்க் குரல் எழுந்தது. ''இவ்வளவு தூரம் வந்துவிட்டு அதுவும் யாரோ ஒருத்தர் மாடியிலிருந்து விழுவதைப் பார்த்த பின்னுடியும் திரும்பிப் போவதா? விஷயத்தைக் கன்யாலாவிடம் சொல்ல வேண்டாமா?''

தயக்கமாய் நடக்க ஆரம்பித்தேன்.

பங்களா காம்பௌண்டை நெருங்கினேன்.

கேட்டில் பக்கத்துக்கொன்றாய் இரண்டு பல்லிகள் பச்சைப் பெயிண்டால் பெரிதாய் வரையப்பட்டிருந்தன. பங்களாவைச் சுற்றி ஆளுயர முட்செடிகள் நிறையத் தெரிந்தன. காற்று வேகமாய் வீசியது.

படியேறிக் கதவை நெருங்கிக் காலிங் பெல்லை அழுத்தினேன்.

கதவு மெல்லத் திறந்தது. கதவுகளுக்குப் பின்னால் ஒரு பெண் தெரிந்தாள். ஒட்டிய முகம். பெரிதான விழிகள், அணிந்திருந்த இரவு நேர பைஜாமா உடையில் நீல வரிகள் அழுத்தமாய் ஒட்டியிருந்தன. அவள் நெற்றியைச் சுருக்கிக் கொண்டு கேட்டாள், இந்தியில்.

''யார் நீங்க?''

நான் அவசரக் குரலில் சொன்னேன். ''என்னோட பேர் ராஜமாணிக்கம். கன்யாலாலைப் பார்க்க வந்தேன்....''

''இந்த ராத்திரியிலா?''

''ஒரு முக்கியமான விஷயம்... அதான் வந்தேன்.''

''வாங்க உள்ளே! அவர் இப்பத்தான் தூங்கஆரம்பிச்சார்...'' சொல்லிக்கொண்டே உள்ளே போக முற்பட்டவளை ''ஒரு நிமிஷம். நீங்கள் கன்யாலாலின் மனைவியா?'' என்று கேட்டேன்:

''ஆமா!''

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி



| | |
|---|---|
| முதல் பரிசு | ரூ. 1000 |
| இரண்டாவது பரிசு | ரூ. 500 |
| மூன்றும் பரிசு | ரூ. 500 |

(இரு கதைகளுக்குத்தலா ரூ. 250வீதம்)

ஆக மொத்தம் ரூ. 2000 பரிசுகளாக வழங்கப்பெறும்.

- தவிர பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ. 100 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர்களுக்குப் போனஸ் உண்டு.
- கதைகள் சொந்தக் கற்பனை என்ற உறுதிமொழி தேவை.
- அறிமுக எழுத்தாளர் எனில் இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும்வரை எழுத மாட்டேன் எனவும் உறுதிமொழி தரவேண்டும்.
- நடுவர் குழு கதைகளைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.
- முடிவு தேதி ஜூன் 15.
- உறையின்மேல் 'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி' என்று குறிப்பிடுதல் அவசியம்.
- பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளை திரும்பப் பெறப்போதிய அளவு தபால் தலை ஒட்டிய சுய விலாசமிட்ட உறையைக் கதையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- கதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாதிருத்தல் நலம். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் கிடையாது.
- சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

ஆசிரியர், கல்கி, சென்னை-600 032

''உங்க கிட்ட ஒரு விஷயம் சொல்லணும். ஒரு பத்து நிமிஷத்துக்கு முன்னாடி உங்க பங்களாவுக்கு நான் வந்துகிட்டிருக்கிறப்போ உங்க பங்களா மொட்டை மாடியிலிருந்து யாரோ ஒருத்தர் தலைகுப்புற, கீழே விழுந்தாங்க... என் கண்ணாலே பார்த்தேன்...''

அவள் சட்டென்று பதறலானாள்.

''ஆச்சரியமா இருக்கே... நானும் என்னோட கணவரும் உள்ளேதானே இருந்தோம். யாராச்சும் விழுந்திருந்தா சத்தம் கேட்டிருக்குமே!''

''உங்க கிட்ட டார்ச் இருந்தாக் கொண்டு வாங்க... கீழே விழுந்த பக்கமா போய்ப் பார்க்கலாம். யாராவது திருட வந்திருக்கலாம்....''

''ஒன் மினிட்.. இதோ டார்ச் கொண்டு வர்றேன்...''

ஆறு செல் டார்ச்சோடு வந்தாள். ''வாங்க பார்க்கலாம்...'' டார்ச்சை உயர்த்திக் கொண்டே முன்னே நடந்தாள்.

'ஊ...ஹூ...ம்...!' யாரும் இல்லே.

கன்யாலாலின் மனைவி குழப்பமாய் என்னைப் பார்த்தாள். உதட்டில் கேலிச் சிரிப்பு.

''நிஜமாப் பார்த்தீங்களா?''

''ஸாரி... மிஸஸ் கன்யா லால்... யாரோ மாடியிலிருந்து விழுந்த மாதிரி இருந்தது. அதான் சொன்னேன்...''

''சரி...வாங்க உள்ளே போலாம்...''— அவள் முன்னே நடந்து வீட்டுக்குள் நுழைந்தாள். நான் பின்தொடர்ந்தேன்.

பங்களா பெரிதாக இருந்தது. முன்புற ஹால் சுவர் பூராவும் வெள்ளைக்காரத்துரைமார்களின் ஆளுயரப் பெயிண்டிங்குகள் வித்தியாசமாய் இருந்தன.

''உங்கள் பேர் என்னன்னு சொன்னீங்க?'' அவள் கேட்டாள்.

''ராஜமாணிக்கம்.''

''வாங்க!'' மாடிப் படிகளில் ஏறினாள். ''தூக்கத்தில அவரை எழுப்பினால் சத்தம் போட்டாலும் போடுவார்...''

''என்னோட பேரைச் சொல்லுங்க... சத்தம் போட மாட்டார்....''

அவள் சிரித்தாள். சிரிக்கும்போது அவள் அழகாக இல்லை.

மாடி ஏறித் தென்பட்ட முதல் அறைக்குள் நுழைந்து ஸ்விட்சைத் தட்டினாள். மெல்லிய வெளிச்சம் அறையில் உதித்தது. ''உட்காருங்க!''

நாற்காலியைக் காட்டினாள் அவள்.

உட்கார்ந்தேன்.

''என்ன சாப்பிடறீங்க... டீ? காப்பி?''

''ஒண்ணும் வேண்டாம். கன்யாலாலைப் பார்த்துப் பேசிட்டு இனி நான் தாதர் போகணும்.''

''கன்யாலாலை எழுப்பினால் உடனே அவருக்கு டீ வேணும். அப்படியொரு பழக்கம் அவருக்கு... எப்படியும் டீ போட்டு ரெடியா வெச்சுட்டுத்தான் அவரை எழுப்பணும்... அதான் கேட்டேன்.'' அவள் புன்னகைத்தாள்.

நான் ஒரு சிறு சிரிப்போடு ''டீ' என்றேன்.

''அஞ்சு நிமிடத்தில் வந்துடறேன்...'' கீழே இறங்க ஆரம்பித்தாள்.

விநாடிகள் கரைய ஆரம்பித்தன.

டீ தயாரிக்கப் போன கன்யாலால் மனைவிக்கு இவ்வளவு நேரமா? அறையை விட்டு வெளியே வந்தேன். மாடி ஹால் முழுதும் இருட்டாய் இருந்தது.

இருட்டிலே மெல்ல நடந்து மாடிச் சுவரை நெருங்கினேன்.

மாடியிலிருந்து கீழே பார்த்தேன்.

தூரத்தே மெயின் ரோட்டில் லாரி ஒன்று தன் ஹெட் லைட் வெளிச்சப் பட்டையோடு ஊர்வது தெரிந்தது. செம்மண் சாலை மசமசவென்று புலப்பட்டது.

கைப்பிடிச் சுவரைப் பற்றிக் கொண்டே ஓரமாய் — ஹாலைச் சுற்றி வந்தேன். அந்தப் பரந்த பொட்டல் வெளியில் ஒரு பங்களாவைக் கட்டிக் கொண்டு குடியிருக்க அசாத்தியமான தைரியம் வேண்டும்! கன்யாலால் துணிச்சலானவன்தான்!

நடந்து கொண்டே இருந்த நான் சட்டென்று நின்றேன். வலது பாதத்தில் ஏதோ பிசுபிசுத்தது.

'ப்ப்ச்ச்சக்' — காலை எடுத்து வைக்கையில் சத்தம் கேட்டது.

என்ன அது?

பேண்ட் பாக்கெட்டில் இருந்த தீப்பெட்டியை எடுத்தேன். 'தீக்குச்சியை உருவி 'சரக்'கினேன். வெளிச்சப் பிழம்பு பிறந்தது. அதை அப்படியே கீழே தாழ்த்தினேன்.

மூச்சை அடைப்பது போல் இருந்தது.

ர....த்....த....ம்...

கோடாய் வழிந்து — தேங்கியிருந்தது. உடம்பு முழுதும் கிலி உட்கார—

இதயம் 'லபக் லபக்'கென்று துடிக்க ஆரம்பித்தது.

கைகள் நடுங்க எரியும் தீக்குச்சியை மேலே கொண்டு போனேன். ரத்தக் கோடு தொடர்ந்தது. தீக்குச்சியின் ஆயுள் முடிய—

மற்றொரு தீக்குச்சியை உரசிக்கொண்டு ரத்தக் கோட்டைத் தொடர்ந்தேன். சில விநாடிகளில் சுவரோரமாய் அந்தச் சாக்குமூட்டை தெரிய — அதன் ஒரு மூலையிலிருந்து ரத்தம் சொட்டிக் கொண்டிருந்தது.

''ஷாக்!'' அலறினேன். சில விநாடிகள் தயங்கிச் சாக்குமூட்டையை இலேசாய் விலக்கினேன். தீக்குச்சி ஒளியில் — கன்யாலால் கசங்கியிருந்தான். ரத்தக்கொசகொசப்பாய்த் தெரிந்தான்.

மாடியிலிருந்து விழுந்தவன் இந்தக் கன்யாலாலா?

அவனே விழுந்தானா: இல்லை யாராவது பிடித்துத் தள்ளி விட்டார்களா?

நிச்சயமாய் இவனாக விழுந்திருக்க மாட்டான். யாரோ தள்ளியிருக்கிறார்கள்!

யார்?

கன்யாலால் எப்போதோ ஒரு முறை என்னிடம் சொன்ன அந்த வார்த்தைகள் காதில் ரீங்கரித்தன. ''ராஜமாணிக்கம்... என்னோட ஒய்ஃபுக்கு நான் செய்யற பிஸினஸ் என்னன்னு தெரிஞ்சுடுச்சு. இந்த ரெண்டு மாசமா அவ சரியில்லை. எதுக்கெடுத்தாலும் கத்தறா.... டாக்டர் கிட்டக் காட்டினேன். உங்க மனைவி ஏதோ ஒரு கோபத்தை அடக்கி அடக்கி வெச்சிருக்காங்க. அது இப்போ ஹிஸ்டீரியாவா மாறிடுச்சு... மூளை எப்ப வேணும்னாலும் பாதிக்கலாம்...''

என் உடம்பிலிருந்த நரம்பு செல்கள் பூராவும் அபாய மணி அடிக்கச் சரேலென நிமிர்ந்தேன். கன்யாலாலை மாடியிலிருந்து தள்ளிவிட்டவள் அவனுடைய மனைவிதான்!

'ஓடு...முதலில் இந்த இடத்தை விட்டு ஓடு!'

மூளை எனக்கு அவசரக் கட்டளை இட—

ஓடுவதற்காகத்தான் திரும்பினேன்.

சில்லிட்டுப் போனேன். எனக்கு வெகு அருகில் —

கைகளைப் பரத்திக் கொண்டு — ஒரு விகாரமான இளிப்போடு — என்னை மாடியிலிருந்து தள்ளிவிடுவதற்காகக் கன்யாலாலின் மனைவி நெருங்கிக் கொண்டிருந்தாள்.!

ஏதாவதொரு மிக்ஸரை வாங்கிவிடாதீர்கள்...




... உங்கள் தேவைக் கேற்றது ஸுமீத்

அற்புதமான ஸுமீத்! இதன் வகையில் இந்தியாவிலேயே முதலாவது. நாடெங்கிலும் மேன்மேலும் அதிக இல்லத்தரசிகளுக்கு வியப்பூட்டி வருகிறது.

ஸுமீத்தில் மட்டுமே, எல்லா வேலைகளுக்கும் பயனுறும், விசேஷமாக வடிவமைக்கப்பட்ட, பல–பயனுள்ள ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் ஜாடி. அதன்மீது உள்ளே பார்க்கக் கூடிய அக்ரிலிக் மூடி. எனவே ஸுமீத் இயங்குவதைக் கண்ணெதிரில் காணலாம்.

பல்வேறு வேலைகளை விரைவிலும் எளிதிலும் செய்து முடிக்க, இப்போது இதில் 4 அலகு அமைப்பு பாகங்கள்:

ஈரப் பண்ட அரைவைக்காக.
உலர் பண்ட அரைவைக்காக.
கடைய, கலக்க, சாறு பிழிய.
மாமிசத்தை அரிக்க,
காய்கறிகளை நறுக்க.

இவை தவிர, சப்பாத்தி, பூரி மற்றும் அப்பளத்துக்காக மாவை விழுதுபோல் பிசைய விசேஷ இணைப்புப் பாகம். அதோடு கேக் மாவை நன்றாகக் கலவை செய்ய விசேஷ 'ஹுக்'...

இவை மட்டுமா? ஸுமீத்தில் 30 நிமிடங்கள் வரை நிற்காமல் ஓடக்கூடிய ஹெவி ட்யூட்டி மோட்டார்.

அற்புதமான ஸுமீத் ஒன்றுதான் முழுமையான கிட்சன் மெஷின். இதை அடைய எத்தனை நாள் வேண்டுமானாலும் காக்கலாம்.



ஈர அரைவை—வடை, இட்லி, தோசைக்காக உளுத்தம் பருப்பு மற்றும் அரிசியை அரைக்க—3½ நிமிடங்களில்.



உலர் அரைவைக்காக—எல்லா வித மசாலாக்கள்—மிளகாய் வற்றல், மிளகு, மஞ்சள், கொத்துமல்லி விதை ஆகியவற்றை அரைக்க.



பொடிக்க—1 நிமிடத்தில் மாமிசத்தைப் பொடிக்க, காரெட், வெங்காயம், தேங்காய், மற்றும் கொட்டைகளை நறுக்க—விநாடிகளில்.



அரைக்க—2 நிமிடங்களில் தேங்காய் சட்னி அரைக்கலாம். அல்லது விநாடிகளில் கொத்துமல்லி சட்னி அரைக்கலாம்.



கடைய—லஸ்ஸி/மில்க் ஷேக் ஆகியவற்றை ஒரே நிமிடத்தில் தயாரிக்க அல்லது நிமிடங்களில் மயோனைஸ் தயாரிக்க, வீட்டிலேயே வெண்ணை கடையலாம்.





மாவு பிசைய—சப்பாத்தி, பூரி, நான் தயாரிக்க 2 நிமிடங்களில் மாவு பிசையலாம். கேக் மாவை மிகவும் சன்மையாகப் பிசையலாம்—3½ நிமிடங்களில்.

# ஸுமீத்®

## இது ஒன்றே முழுமையான கிட்சன் மெஷின்

இது தவிர கிடைக்கிறது ஸுமீத் டொமஸ்டிக் (பிசையும் இணைப்பு இல்லாமல் கிடைக்கிறது. அதை தனியாகவும் வாங்கிக் கொள்ளலாம்.)

அற்புதமான ஸுமீத் பரவலாகப் பல்வேறு பணிகளைச் செய்கிறது—மற்ற எல்லா வீட்டுபயோக மிக்ஸர்களை விடச் சிறப்பாக.

எப்போது நாங்கள் இலவசமாக இயக்கிக் காட்டுகிறோம் என்பதைக் கவனித்து வாருங்கள். உங்களுக்கெனவே ஸுமீத சிறபபாக இயங்குவதைக் காணுங்கள்!

சர்வீஸ் சென்டர்கள் : சென்னை : ரிப்ரோகிராபர்ஸ் அண்ட் என்ஜினியர்ஸ், போன் : 445700/442055; விவேக் ஏஜென்ஸீஸ், போன் : 76923/75661; மெஸர்ஸ் விவேக் அண்ட் கோ., போன் : 444129. மெஸர்ஸ் விவேக் அண்ட் கோ., போன் : 663545; வி.ஜி. பன்னீர்தாஸ் அண்ட் கம்பெனி, போன :812121/88184 கோயமுத்தூர் : ஜே. என்ஜினியரிங் கார்ப்பரேஷன், போன் : 24579, மதுரை : ஜே. என்ஜினியரிங் கார்ப்பரேஷன், போன் : 24028. திருச்சி : ஸ்டாண்டர்ட் எலெக்ட்ரிக்-கம்பெனி, போன் : 24343.

OBM/5628 AR/1 TM

# வாழ்கின்ற வாழ்வு அருள்வாய்

கீரன்

பலருக்கு மரணம் அச்சத்தை விளைவிக்கிறது. எத்துணைக்காலம் வாழ்ந்தாலும் சாதல் கொடுமை என்றே உணர்கிறோம். அது வருவது எப்போது என அறிய முடியா விட்டாலும் அது பற்றிய அச்சம் வாழ்க்கை முழுவதையும் ஆக்கிரமித்துக் கொள்கிறது.

சிலர் மரணத்தை வென்றவர்களாகத் தெரிகிறார்களே! அது அவர்களுக்கு மட்டும் கிட்டிய பேறு? அநுபவமா? ஒன்றுமில்லை. இறைவன் திருவடியில் மாறாத பக்தி கொண்டவர்களுக்கு இறப்பைப் பற்றியோ பிறப்பைப் பற்றியோ கவலையில்லை.

பலர் தன்னைப் பிறப்பித்தவன் பிரம்மன் என்பதால் வாழ்க்கையில் இழப்புகள் வரும் போது, 'பிரமன் தலையில் எழுதிய எழுத்து' என்று அலுத்துக் கொள்கின்றனர். ஏன் பிரம்மன் தலையில் எழுதியதாக எண்ணுகின்ற —நமக்கு இழப்பு வரும்போது நாம் எண்ணிப் பார்க்கின்ற — அந்த எழுத்தை அழிக்க முடியாதா? முடியும்.

அருணகிரியார் பாடுகிறாரே, "என்னைச் சிற்றின்பத்தில் மூழ்கி அழிந்துபோ என்று தான் பிரம்மன் எழுதியிருந்தான். திருச்செந்தூர் தேவன் அதனை மாற்றித் திருப்புகழ் பாடும் திறம் எனக்குத் தந்தான்" என்று. "கால் பட்டு இங்கே அழிந்தது தலைமேல் அயன் கையெழுத்தே."

குமர குருபரர் ஊமையாக இருக்க எழுதியவன்தான் பிரம்மா.. ஆனால் செந்தில்நாதன் அவருக்குப் பேசும் ஆற்றலைத் தந்ததுடன், கவி பாடும் திறத்தையும் அருளவில்லையா?

இப்படிச் சில சம்பவங்களைப் படிக்க, கேட்க, நமக்கும் பிரம்மாவைப் பற்றிய அச்சம் போய்விடுகிறது!

"இவை மட்டுமா? பிரம்மன்தான் தலையில் 'நறுக்'கென்று ஒரு குட்டு வாங்கி இன்னும் தடவிக் கொண்டிருக்கிறானே! எல்லாம் வல்ல முருகப் பெருமான் முன்னர் 'ஓம்' என்ற பிரணவத்துக்குப் பொருள் சொல்லத் தெரியாது விழித்தபோது, அவர் தலையில் குட்டிச் சிறையில் போடவில்லையா? அப்போது பட்ட குட்டு அதற்குள் மறந்துவிடுமா என்ன? அதனால் பிரமனைப் பற்றி எனக்குக் கவலையில்லை. அதனால் நான் பிறப்பைப் பற்றி அஞ்சவில்லை."

"இரவு நிறத்தை யுடைய எமன் இருக்கிறானே அவனைக் கண்டால் கொஞ்சம் அச்சம் வருமோ? அவனுக்கும் நான் அஞ்சவில்லை. ஏனெனில் எம்பெருமானிடம் அவனும் உதை வாங்கியவன்தான். மார்க்கண்டேயன் உயிரை வாங்க வந்து மகாதேவனிடம் உதையுண்டவன்தானே எமன்? அப்போது அவனுக்கு ஏற்பட்ட வடு இன்னும் நீங்கவில்லையே! அதனால் யமனைப் பற்றி எனக்குக் கவலையில்லை. அதனால் நான் இறப்பைப்பற்றிஅஞ்சவில்லை."

பிறப்பும் இறப்பும் இருக்கட்டும். நல்வினை, தீவினை என்கிறார்களே, அவற்றினின்றும் தப்ப முடியுமா? ஏனெனில் சில காரியங்களுக்குக் காரணம் தெரியாதபோது அவை முற்பிறவியில் செய்த வினையின் விளைவுகள் என்றுதான் கொள்ள வேண்டியிருக்கின்றன. "அறம் பாவம் என்னும் அருங் கயிற்றால் கட்டி" இந்த உடலைப் பக்குவம் செய்கிறான் இறைவன் என்று மாணிக்க வாசகர் கூறியுள்ளாரே!" எனக்கு நல்வினை, தீவினைகளைப் பற்றியும் கவலையில்லை. காரணம் எல்லாம் வல்ல இறைவன் புகழைப் பாடுகிறவர்களுக்கும், சிந்திக்கிறவர்களுக்கும் நல்வினை, தீவினை இரண்டின் பாதிப்பும் இல்லை.

"இருள்சேர் இரு வினையும் சேரா இறைவன் பொருள் சேர் புகழ் புரிந்தார் மாட்டு" என்பது திருக்குறள். இறைவனுடைய பொருளைப் பேசும் கற்றறிந்தார் தம்முடன் கூடியிருப்பேன். அதனால் நல்வினை, தீவினைகளும் என்னைப் பாதித்தல் இல்லை. அதனால் அவற்றுக்கும் அஞ்சவில்லை."

பிறப்பு, இறப்பு, நல்வினை தீவினை என்பன வற்றின்பால் மனிதன் கொண்டுள்ள அச்சங்கள் எல்லாம் தீர்ந்த பிறகு மனித வாழ்வில் அமைதிக்குக் குறைவு ஏது? இந்த அச்சங்கள் எல்லாம் விலக அவரவர் ஆன்ம நாயகனை வணங்குதல் வேண்டும். இந்த நிலையை ஒவ்வொருவரும் எய்திவிட்டால் அவர்களே மரணத்தை வென்றவர் ஆவர். அச்சமற்று வாழ்வதுவே வாழ்வு. இந்த வாழ்வைத் தர வேண்டும் என்று வள்ளலார் கம்பீரமாகப் பாடுகின்றார்.

'பிரமன் இனிஎன்னைப் பிறப்பிக்க வல்லனோ?
பெய்சிறையில் இன்னும் ஒருகால்
பின்பட்டு நிற்குமோ? முன்பட்ட குட்டில்
பெருந்துயர் மறந்து விடுமோ?
இரவுநிறம் உடை இயமன் இனிஎன்னைக் கனவினும்
இறப்பிக்க எண்ணம் உறுமோ?
எண்ணுறால் உதையுண்டு சிதையுண்ட தன்உடல்
இருந்தவடு எண்ணிறானோ?
கரவுபெறு வினைவந்து நலியுமோ? அதனைஒரு
காசுக்கும் மதியேன்: எலாம்
கற்றவர்கள் பற்றும்நின் திருவருளை யானும்
கலந்திடப் பெற்று நின்றேன்.
தரமருவு சென்னையில் கந்தகோட்டத் துள்வளர்
தலம் ஓங்கு கந்தவேளே!
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே!

## உயிர்ப்பிச்சை அளித்த

# உத்தமர்!

● மூன்று வயதாயிருக்கும்போது, சிறுநீரகக் கோளாறு வந்து அவதிப்பட்டேன். டாக்டர் ரங்காச்சாரிக்கு என் மேல் இரக்கம் உண்டாயிற்று. பீஸ் எதுவும் வாங்கிக் கொள்ளாமலே ஆபரேஷன் செய்தார். பூரண குணமாயிற்று. இப்போது ஐம்பத்து நாலு வயதாகிறது எனக்கு. என் அப்பா அடிக்கடி, ''நீ டாக்டர் ரங்காச்சாரி போட்ட பிச்சைடா!'' என்று சொல்லுவார். ஜெனரல் ஆஸ்பத்திரி வாசலில் டாக்டரின் சிலையைக் காணும்போதெல்லாம் அவருக்கு அஞ்சலி செலுத்துகிறேன்.

● ஐம்பது வருடங்களுக்கு முன்னால் நடந்தது இது. என் சகோதரிக்கு 38 வயது. இடீரென்று அவளுக்கு மார்பகக் காம்புகளில் எக்ஸிமா மாதிரி புண் வந்து விட்டது. டாக்டர் ரங்காச்சாரி பார்த்துவிட்டு அக்ரிஃப்ளேவின் ஆயின்ட்மெண்ட் தடவச் சொன்னார். புண் போன இடம் தெரியவில்லை. துரதிர்ஷ்டவசமாக, சில நாட்களில் மறுபடியும் மார்பகத்தில் காம்புகளில் எக்ஸிமா மாதிரி வர ஆரம்பித்ததும் பழைய ஆயின்ட்மென்டையே தடவினாள். பயன் ஒன்று தெரியவில்லை. நான் அவளை வேறு ஒரு டாக்டரிடம் கூட்டிக் கொண்டு போனேன். அவர் இது கான்சர்தான் என்று அடித்துச் சொன்னதோடு மார்பகங்களை ஆபரேஷன் செய்து அகற்றிவிடுவதுதான் உயிரைக் காப்பாற்ற ஒரே வழி என்றார். ஆபரேஷனுக்குப் பயப்படும் பட்சத்தில் அப்போதுதான் சென்னைக்கு வந்திருந்த கதிரியக்க—ரேடியேஷன்—சிகிச்சை செய்து கொள்ளலாம் என்றார்.

ஒரு முறை கதிரியக்கச் சிகிச்சை ஆனதும், டாக்டர் ரங்காச்சாரியிடம் போய் விஷயத்தைச் சொன்னேன். ''அது கான்சரே அல்ல. பயாப்ஸி செய்யாமல் எப்படி கான்சர் என்று சொல்ல முடியும்?'' என்ற அவர், கொஞ்சம் எரிச்சலுடன் தொடர்ந்தார்: ''என்ன காரியம் செய்தீர்கள்! கதிரியக்க முறையே கான்சரை உண்டாக்கிவிடுமே—அதுவும் மென்மையான மார்பகம் போன்ற உறுப்பில்!''

வேறு ஒரு ஆயின்ட்மெண்டைத் தடவச் சொல்லிவிட்டு, வைடமின் பி சாப்பிடச் சொன்னார். இந்தச் சிகிச்சைக்குப் பிறகு என் சகோதரி முழுதும் குணமானாள்.

● கணிதப் பேராசிரியர் ஒருவர், வறண்ட இருமலுடன் எப்போதும் அவஸ்தைப்பட்டுக் கொண்டிருந்தார். அவரை டாக்டர் ரங்காச்சாரி பரிசோதித்துவிட்டு, ''உமக்கு ஒரு நோயுமில்லை புரொபசர்! நீங்கள் கூன் முதுகு போட்டு வளைந்து நடப்பதை விட்டு ராணுவ வீரன் மாதிரி நிமிர்ந்து நடவுங்கள்'' என்றார். கூன் போட்டு நடப்புதால், நுரையீரலுக்குப் போக வேண்டிய தேவையான காற்றைச் சரிவர சுவாசிக்க முடியாமல் அவர் அவதிப்படுவதாக டாக்டர் ரங்காச்சாரி சொன்னார். டயட் மட்டும் எழுதிக் கொடுத்தார். கணிதப் பேராசிரியருக்கு அதற்குப் பிறகு இருமலே வரவில்லை!

● டாக்டரின் ஊரான தஞ்சாவூர் ஜில்லா கிராமத்திலிருந்து வெகுநாள் முற்றிப் போன வியாதியுடன் கூடிய ஒரு சிறுவனை, பெரியவர் ஒருவர் அழைத்து வந்தார் டாக்டரிடம். பையனைப் பார்த்த மாத்திரத்தில் ஒரு மருந்தை எழுதிக் கொடுத்து விட்டுப் போய்விட்டார் ரங்காச்சாரி. பெரியவருக்கு ஏமாற்றம். என்னடா இது, பையனைச் சரியாகக் கவனிக்காமலே மருந்து எழுதிக் கொடுத்து விட்டாரே என்று. டாக்டரும் இதைக் கவனித்தார். பதினைந்து நாள்



கழித்து மறுபடியும் பெரியவர் தம் பேரனுடன் வந்தபோது, டாக்டருக்கும் பெரியவருக்கும் நடந்த உரையாடல்:

டாக்டர்: சென்ற முறை நான் உங்கள் பேரனைச் சரியாகக் கவனிக்காமல் போனேன் என்று நீங்கள் நினைத்தீர்கள் இல்லையா?

பெரியவர்: ஆமாம் டாக்டர்!

டாக்டர்: பையன் யாரு?

பெரியவர்: என் பேரன் டாக்டர்.

டாக்டர்: அவன் உங்கள் பேரன் என்று நீங்கள் தெரிந்து கொள்ள உமக்கு எத்தனை வருஷங்களாகின்றன?

பெரியவர்: வருஷங்களா! பார்த்த உடனே தெரிந்து கொள்வேனே டாக்டர், என் பேரன் என்று!

டாக்டர்: அதுபோல்தான் நானும். பல வருஷங்களாக இது மாதிரி நோயாளிகளை நான் தினசரி பார்க்கிறேன். உமது பேரனுக்கு என்ன நோய் என்று பார்த்த உடனே தெரிந்து கொண்டேன்!

● ஏழை எளியவரிடம் டாக்டர்ரங்காச்சாரி பேரன்பு கொண்டிருந்தார். காலை வேளையில் மெரினா கடற்கரையில் வெகு வேகமாக நடப்பார். அவர் கூடவே ஏழை இளைஞர்கள் சிலர் நடப்பார்கள். நடந்து முடித்ததும் ஒரு பெட்ஷீட்டை மணல் தரையில் விரிப்பார் டாக்டர். பெரிய பாத்திரத்திலிருந்து குளுகுளுவென்ற தயிர் சாதத்தைச் சிரித்த முகத்துடன் அவர் அந்த ஏழை இளைஞர்களுடன் பகிர்ந்து கொண்டுவிட்டு நீரை அருந்துவார். அவர் கையால் சாப்பிடக் கொடுத்து வைத்ததைப் பெரும் பேராகக் கருதினார்கள் அந்த இளைஞர்கள்.

● ஒருமுறை என் உறவினர் ஒருவருக்கு, அவருடைய வீட்டிலேயே டாக்டர் ரங்காச்சாரி அறுவைச் சிகிச்சை செய்தார். தையல் போட வேண்டிய சமயத்தில் நரம்பினால் ஆன நூல் குறைவாக இருக்கவே, ஒரு துண்டு ட்வைன் நூலைக் கொண்டு வரச் சொன்னார். அதைச் சுடுநீரில் அமிழ்த்தி உலர்த்தினார். அதையே மீதித்தையலுக்கு உபயோகித்தார். செப்டிக் ஆகுமோ, தையல் பிரியாமல் இருக்குமோ என்றெல்லாம் எங்களுக்குக் கவலையாக இருந்தது. ஆனால் வழக்கமான இடைவெளிக்குப் பிறகு தையலைப் பிரித்தபோது—புண் ஆறியிருந்தது!

● ஒரு நள்ளிரவு.

சாந்தோமிலிருந்து ஒரு டெலிபோன் கால் வருகிறது, டாக்டருக்கு. அருகிலிருந்த மீனவர் குடும்பத்தில் ஒரு பெண்மணி பிரசவ வேதனையில் துடிப்பதாக. அடுத்த நிமிடம் டாக்டர் தமது ரோல்ஸ்ராய்ஸ் காரில் பறக்கிறார் குப்பத்துக்கு. விடிகாலையில் வேதனை குறைந்து பிரசவம் ஆன பிறகே டாக்டர் கிளம்புகிறார். நன்றியுடன் குப்பத்து மக்கள் திரட்டித் தந்த பத்து ரூபாயை மறுத்து, அந்த ஏழைப் பெண்ணுக்கு உதவும்படி சொல்லிவிட்டுச் செல்கிறார்.

● உடல்நலம் சரியில்லை என்று எவரும் நேரிலோ, போன் மூலமோ சொல்லிவிட்டால் போதும். அடுத்த நிமிடம் அங்கே தமது ரோல்ஸ் ராய்ஸ் காரில் பறந்து வந்து விடுவார் டாக்டர். சென்னையில் அந்நாளைய ஜோக்: 'சென்னையிலேயே ரொம்ப சீப்பான டாக்ஸி டாக்டரின் ரோல்ஸ் ராய்ஸ்தான்!'

● அதிக மருந்துகள் கொடுப்பதில் டாக்டர் ரங்காச்சாரிக்கு நம்பிக்கை இல்லை. நோயாளி குணமடைந்து விட்டால் டாக்டர் விலகிவிடுவார், இயற்கை தன் பணியைச் செய்துகொள்ளட்டும் என்று.

**ஆதாரம்: 'ஹிந்து' கட்டுரை, ஹிந்து வாசகர்கள் எழுதிய 'ஆசிரியருக்குக் கடிதங்கள்'**

தொகுப்பு: **சாருகேசி**



கல்கத்தாவுக்கு டூரில் போன அவள் கணவன் ஜெயராமன் கையை வீசிக்கொண்டு சும்மா திரும்பி வரமாட்டானே?

அவளுக்கு ஒரு 'ஸீ த்ரு' புடவையும் வாங்கி வந்து நின்றான்.

அவனைச் சொல்லிக் குற்றமில்லை.

ஜெயராமன் இருந்த இருப்புக்குத் துப்பட்டிக்கும் புடவைக்கும் அவனுக்கு வித்தியாசம் தெரிவதே அதிகம்தான். அவன் பெற்றோர்களுக்கு ஒரே பிள்ளை.

கூடப் பிறந்த சகோதரிகளும் கிடையாது.

அம்மாவுடைய புடவை, ப்ளவுஸ் இத்யாதி தேவைகளை அப்பா கவனித்துக் கொண்டு விடுவார்.

ப்ரியாவுக்கு எல்லாம் பிறந்த வீட்டிலிருந்து வந்துவிடும். இல்லையென்றால் சிநேகிதியுடன் கடைக்குப் போய் வேண்டியதை வாங்கிக்கொண்டு ஜெயராமனுடைய பர்ஸின் கனத்தைக் கொஞ்சம் குறைத்துக்கொண்டு வருவாள்.

புடவைக் கடைக்குப் போக வேண்டிய அவசியமே அவனுக்கு இதுவரை ஏற்பட்டதில்லை.

அவளுக்குத் தெரியும். உள்ளுக்குள் பொங்கும் பயம் வெளிக்குத் தெரியாத வண்ணம் இழுத்து மூடிக் கொண்டு கல்லூரியை அடைவதற்குள் அவள் பல நாட்கள் திண்டாடிப் போனதுண்டு.

அப்போதே அப்படியானால் திருமணமாகி அவள் ஒரு குழந்தைக்குத் தாயும் ஆன பிறகா இது மாதிரிப் புடவைகளையெல்லாம் உடுத்தப் போகிறாள்? அதைப் புரிந்து கொள்ளாமல் அவன் ஏன் இப்படி எதிர்வாதம் செய்கிறான்!

''அம்மா தாயே ஏதோ தெரியாமலே வாங்கிண்டு வந்துட்டேன். என் நல்லெண்ணத்தை அப்ரிஷியேட் பண்ணாமல் குத்தம் சொல்றதுக்கு மட்டும் வாய் நன்னாக் கிழியறது.''

''இதுக்கு எத்தனை தண்டம் அழுதேள்? இந்தப் புடவையை என்ன பண்றதாம்?''

''இஷ்டமானால் உடுத்திக்கோ. கஷ்டமாயிருந்தால் சுருட்டிக் குப்பைத் தொட்டியிலே எறி'' என்றான் அவன் சலிப்புடன்.

''பணத்தைக் கொட்டி வாங்கிட்டுச் சுலபமா எறின்னு சொல்லிட்டேள். மனசு வருமா?''

# ‘ஸீ த்ரூ புடவை’

''பில் இந்தக் கொசு வலையை எப்படி வாங்கினீர்களாம்?'' – ப்ரியா சிடுசிடுத்தாள்.

''ரொம்ப சந்தோஷம்'' என்றான் ஜெயராமன்.

''எதுக்கு?''

''என்னைப் பிடுங்கித் திங்கிற கொசுன்னு இப்பவாவது உன் வாயாலேயே உன்னைப் பத்தி ஒப்புக் கொண்டதற்கு.''

''என்னை ஏதாவது சொல்லாட்டா உங்களுக்குப் பொழுதே போகாதே'' என்றாள் ப்ரியா பதிலுக்கு.

வார்த்தைகள் பரிமாறிக் கொள்ளப்பட்ட ஆவேச கதியிலும் அவனுக்கு ஒன்று புரிந்தது.

ஜெயராமனுடைய சிநேகிதன் தருண் பானர்ஜிதான் அந்தப் புடவையை 'செலக்ட்' செய்தானாம்.

தருணுடைய ரசனை அந்த லட்சணமாக இருந்தால் அதற்கு ஜெயராமனை எப்படிப் பொறுப்பாளியாக்க முடியும்?

கல்லூரியில் படித்த நாட்களிலேயே ப்ரியா அது மாதிரி மெல்லிய புடவைகளை உடுத்திக் கொண்டதில்லை. என்னதான் புடவைக்கு அடியில் உள் பாவாடையும் ரவிக்கையும் அணிந்து கொண்டாலும் உடம்பின் வளைவு சுளிவு, நெளிவுகளை அப்படி அப்பட்டமாக வெளிச்சம் போட்டுக் காட்டுகிற மாதிரி புடவை அணிய அவளுக்குக் கூச்சமாக இருந்தது.

சாதாரணமாக உடுத்திக் கொண்டு, குனிந்த தலை நிமிராமல் நடந்து போனாலேயே சைட் அடிக்கும் சில இளவட்டங்களை

ப்ரியா விடாமல் தொண தொணத்தது ஜெயராமனுக்கு எரிச்சலை உண்டு பண்ணியது. ''மனசு வராட்டா நம்ம வீட்டு வேலைக்காரி வள்ளியம்மாவுக்குக் கொடு. அவள் உடுத்திண்டா எப்படி இருக்குன்னாவது பார்க்கிறேன்.''

அவ்வளவுதான்.

கசப்பு மருந்து கொஞ்சம் ஓவர் டோஸாகவே போய்விட்டது.

மறுநாள் மாலையில் மார்க்கெட் பக்கம் போக இருவருமாகக் கிளம்பியபொழுது ப்ரியா 'டிங்' என்று 'ஸீ த்ரு'வில் வந்து நின்றாள். முகத்தில் கடுகடுவென்று அனல் பொரிந்தது.

''வந்தாயா வழிக்கு'' அவன் தனக்குள் சொல்லிக் கொண்டான்.

''சரி கிளம்பு. குழந்தை எங்கே?''

''அடுத்த வீட்டில் விளையாடறான்'' என்றவள் தொடர்ந்து ''நான் இந்தப் புடவையைக் கட்டிண்டால் மத்தவாளுடைய ரியாக்ஷன் எப்படி இருக்குன்னு நீங்களும் பார்க்கட்டும் அப்படின்னுதான் கட்டிண்டேன்'' என்றாள்.

''எல்லோரும் உன்னைப் பார்க்கத்தான் மார்க்கெட் வருகிறார்களா என்ன? ஸ்டுபிட்டா பேசாதே. வா.''

இருவருமாக பஸ் ஸ்டாப்பில் போய் நின்றார்கள்.

ஒருவன் சைக்கிளில் விசிலடித்துக் கொண்டே போனான்.

ப்ரியா ஜெயராமனை நிமிர்ந்து பார்த்தாள்.

''இன்னிக்கு அவன் மனசு சந்தோஷமாக இருக்குப் போல இருக்கு. விசிலடித்துக் கொண்டு வீட்டுக்குப் போறான். அதையும் உன் புடவையையும் சம்பந்தப்படுத்தாதே.''

பஸ் வந்தது.

ஏறினார்கள்.

பின்னால் வந்தவனின் கை அவள் தோள் பட்டையில் இடித்தது.

ப்ரியா கூச்சத்தினால் சுருங்கிப் போனாள்.

க்யூவில் சற்றுப் பின்னால் அவர்கள் எதிர் வீட்டுப் பையன் பூபதி. அவளை உற்றுப் பார்த்து ஹலோ சொன்னான்.

லேடீஸ் சீட்டில் உட்கார்ந்திருந்த கிழம் ஒன்று அவளுக்கு எழுந்து நின்று இடம் கொடுத்தது.

ஒவ்வொரு ஸ்டாப்பிலும் கூட்டம் ஏற ஜெயராமன் நகர்ந்து ரொம்ப முன்னால் போய் விட்டான்.

ஒரு நாற்பது அவள் மேல் சாய்ந்து கொண்டு பர்ஸை எடுத்தது.



''மோசம்... ரொம்ப மோசம். நான் என்ன தூணு எல்மேல் ஏன் சாஞ்சுக்கணும்?''

''ஸீத்ருவின் மூலம் உன் உடம்பைத் தொட்டுப் பார்க்கணும்னு அவன் நினைச்சதாக வியாக்யானம் கொடுக்காதே.''

ப்ரியா பேசாமல் நடந்தாள்.

கறிகாய்க் கடைக்காரன் சில்லறையைக் கொடுக்கும்போது அவளைக் கூர்ந்து பார்த்தான்.

எல்லோருடைய பார்வைக்கும் இப்படி இலக்காகவும் வேண்டாம் இப்படிக் கூனிக் குறுகி அவஸ்தைப்படவும் வேண்டாம்.

''ஹலோ ஜெய்!''

ஜெயராமனின் நண்பன் ப்ரஸன்னு எதிர்ப்பட்டான்.

அட கஷ்ட காலமே.

சீக்கிரம் வீட்டுக்குப் போய்த் தொலைந்து இந்தப் புடவையை அவிழ்த்து எறியலாம் என்றால் இந்த உலகத்தில் இருக்கிற தெரிந்தவர்களை யெல்லாம் இன்றுதான் பார்க்க-வேண்டுமா என்ன?

ப்ரஸன்னு பேசிக் கொண்டே பார்வையால் ப்ரியாவை ஊடுருவினான்.

அவள் தலையைக் கவிழ்த்துக் கொண்ட போது கண்கள் நீரில் சலனப்பட்டன.

''களைப்பாக இருந்தால் ஆட்டோவில் போய்விடலாம்.''

''ம்....''

ஆட்டோவில் வீடு வந்து சேரும் வரை இருவரும் பேசிக்கொள்ளவில்லை.

சாமான்களை இறக்கிவிட்டு ''நீங்கள் கதவைத் திறவுங்கள். நான்அதுக்குள்குழந்தையை அடுத்தவீட்டிலிருந்து அழைச்சுண்டு வரேன்'' அவள் விரைந்தாள்.

வாயில் மணியை அடித்தபோது அடுத்த வீட்டு மாமாதான் கதவைத் திறந்தார்.

''குழந்தை....'' என்று தயங்கினாள்.

''உள்ளே தூங்கறான்.''

''மாமி எங்கே?''

''கோயிலுக்குப் போயிருக்கா.''

மாமா அவளை ஒரு மாதிரி பார்த்தார்.

சரி இவர்தான் பாக்கி. புடவையை மாற்றிக் கொண்டு குழந்தையை எடுத்துக் கொண்டு போயிருக்கலாமோ? — அவள் தனக்குள் நினைத்துக் கொண்டாள்.

அதற்குள் மாமா ''சொன்னுத் தப்பா நினைக்கப்படாது''என்று பீடிகையுடன் துவங்கினார்.

''இது மாதிரி புடவை எல்லாம் கட்டாதே''என்று நிச்சயம் சொல்லப்போகிறார்.

அவமானம்! பக்கத்து வீட்டுக்காரர் சொல்லும்படியாகி விட்டது!

''உங்களுக்கு நன்றாக இல்லை.''

''எது? புடவையா?''

''இல்லை. பொட்டு இல்லாத நெற்றி. அகலமான முகம் உங்களுக்கு. நெற்றிக்கு நடுவில் பளிச்சுன்னு தீபம் ஏத்தின மாதிரி நீங்க பொட்டு வைச்சுண்டாத்தான் லட்சுமிகரமா நன்னு இருக்கு.''

''அவர் என்ன சொல்லுகிறார்...'' திகைத்துப்போனவளாய்க் கன்னத்தின் ஓரத்தில் முழுமுழுவென்று ஏதோ ஊர்வதைப் போல் உணர்வு ஏற்படவே கையால் வருடி எடுத்தாள்.

கிளம்பும்போது அவசரத்தில் அவள் வைத்துக்கொண்ட பிளாஸ்டிக் சிவப்பு நிற பொட்டு நெற்றியிலிருந்து நழுவிக்கன்னத்தில் ஒட்டிக் கொண்டிருந்தது கையோடு வந்தது.

அடக் கடவுளே! எல்லோரும் அதையா அப்படிக் கூர்ந்து பார்த்து விட்டுப் பேசாமல் இருந்து விட்டார்கள். அவள் தன் புடவையை அவர்கள் பார்ப்பதாக அல்லவா நினைத்து விட்டாள். அப்போது குற்றம் அவள் மனத்தில்தானு? அவர்கள் பார்வையில் இல்லையா?

குழந்தையை எடுத்து வந்து விட்டு ஜெய்யிடம் விவரத்தைச் சொன்னபோது அவன் சொன்னான்: ''ஸாரி ப்ரியா அந்தப் புடவையைக் கட்டிண்டு நீ இத்தனை சங்கடப்படுவேன்னு தெரியாது. நீ ஸீத்ரு கட்டிண்டு எல்லோருடைய பார்வைகளையும் ஊடுருவி உள்ளர்த்தம் கண்டு பிடித்து அவஸ்தைப் பட்டது போதும். இனிமேல் உடுத்தாதே. நான் வேறு வாங்கித் தரேன்.''

ப்ரியா நிர்மல மனசுடன் சிரித்தாள்.



கல்வி அதிகாரி பள்ளிக்கூடத்துக்கு வந்தால் ஒரு குறிப்பிட்ட வகுப்பில் காச்மூச்சென்று கத்தல். நேராக அவ்வகுப்பிற்குச் சென்ற அதிகாரி, உயரமாயிருந்த ஒரு பையனைப் பார்த்தார். அவன்தான் எல்லோருக்கும் மேலாகக் கத்திக் கொண்டிருந்தான். அவனைப் பிடித்து வெளியே இழுத்து வந்து வெய்யிலில் நிறுத்தி, ''கொஞ்ச நேரம் இப்படியே நில், அப்போதுதான் புத்திவரும்'' என்று கூறி விட்டுச் சென்றார்.

ஒரு சின்னப்பையன் அவரிடம் ஓடோடி வந்தான். ''சார், எங்க வாத்தியார் இப்படியே எவ்வளவு நேரம் நிற்பார்? பெல் அடித்தால் நாங்கள் வீட்டுக்குப் போகலாமா?'' என்று கேட்டான். -ராமுசாமி

# மனமேடையில் சில நாடகங்கள்!









சென்னை நகரில் இயங்கி வரும் பிரபல நாடகக் குழுவினர் ஒருசிலரிடம் 'உங்கள் குழுவுக்கென சென்டிமென்டலான விஷயங்கள் ஏதாவது உண்டா?' எனக் கேட்ட போது, அவர்கள் சொன்னவை:

**திரு ஆர்.எஸ். மனோகர் (நேஷனல் தியேட்டர்ஸ்)**

''ஸ்கிரிப்ட் ரெடியானதும் சோளிங்கபுரம் யோக லட்சுமி, யோக நரசிம்மர், யோக ஆஞ்சனேயர் கோவிலிலும், பெரியபாளையம் பவானி அம்மன் கோவிலிலும் பூஜை செய்வோம். எங்கள் குழு ஒன்றில்தான் நடிகர்களுக்கு அச்சிட்ட ஸ்கிரிப்ட் தரப் படுகிறது. அதில் கடவுள் வேடங்கள் ஏற் பவர்கள் பெயர்கள்தான் (எந்த வயதினராக இருந்தாலும்) முதலில் இடம் பெறும். வெளியூர்களுக்கு செட் ப்ராப்பர்ட்டிகள் ஏற்றிச் செல்லும் லாரிக்குப் பூஜை செய் வோம். நான்கு சக்கரங்களிலும் குங்குமம் தடவி எலுமிச்சம் பழங்கள் வைத்து, லாரி பழங்களை நசுக்கிப் புறப்படச் செய் வோம்.''

**திரு விசு (விசுவசாந்தி குழு):**

''எப்போதுமே என் நாடக ஹீரோயின் களின் பெயர் 'உமா'தான். இது என் சென்டிமெண்ட்.''

**திரு கோமல் சுவாமிநாதன் (ஸ்டேஜ் ஃப்ரெண்ட்ஸ்):**

''ஒவ்வொரு நாடகத்தையும் ஆரம்பிக்கு முன் மகா கவி பாரதியின் 'நெஞ்சுக்கு நீதி'... பாடலைப் பாடுவோம். இன் னொன்று — ஹீரோயின் பெயர் நான்கெழுத் துக்கள் கொண்டிருக்கும். உதாரணம்: செவந்தி, கல்யாணி, ஸ்டெல்லா.

**திரு பூர்ணம் விசுவநாதன் (பூர்ணம் நியூ தியேட்டர்ஸ்):**

நாடகம் இருக்கும் நாட்களிலெல்லாம், எங்கே இருந்தாலும், வீட்டுக்கு வந்து, குளித்து, பூஜை செய்துவிட்டு, என் தாயாரை நமஸ்கரித்துவிட்டு நடிக்கப் போவேன். இப் போது தாயார் படத்தை நமஸ்கரித்து விட்டுப் போகிறேன். வெளியூர் போனால் என் அம்மா படம் எடுத்துக் கொண்டு போவேன். நாடகத்தில் என் சம்பந்தப்பட்ட வைகளை ஒரு பச்சைநிற சூட்கேஸில் போட்டு வைத்திருப்பேன். மேடையில் பெட்டியுடன் தோன்றவேண்டிய காட்சிகளில் அந்தப் பச்சை சூட் கேஸைத்தான் பயன்படுத்து வேன்.''

**திரு எஸ். வி. சேகர் (நாடகப் பிரியா):**

''புதிய நாடகம் எழுதி முடிக்கப்பட்ட வுடன், பூஜைக்கு முன்னால் ஸ்கிரிப்டின் முதல் பக்கத்தில் உள்ள வசனங்களை அடித்துவிட்டு அவற்றை மாற்றி எழுதுவது இதுவரை நாங்கள் சென்டிமென்டலாய்க் கடைப் பிடித்து வரும் ஒன்று.''

**திரு ஒய். ஜி. பார்த்தசாரதி (யு. ஏ. ஏ.):**

''எழுதி முடிக்கப்பட்ட புதிய நாடகப் பிரதியை எழும்பூரில் உள்ள செல்வ விநாய கர் கோவிலில், சர்க்கரைப் பொங்கல், வடை யுடன் ஸ்பெஷல் பூஜை நடத்திய பின்தான் நடிக, நடிகையர்க்கு தருவது என் வழக்கம்.''

**திரு பி. எஸ். பத்மநாபன் (சாந்தினி கேதன்):**

''தேதி வாங்கிவிட்ட பின் எக்காரணம் கொண்டும் நாடகத்தை கான்ஸல் செய்யக் கூடாது என்பது எங்கள் மதிப்புக்குரிய அமரர் டி. எஸ். சேஷாத்திரியின் கொள்கை. அவர் மறைவை அடுத்த நாட்களில் கூட அவருடைய கொள்கைப்படி கான்ஸல் செய் யாமல் துக்கத்துடனேயே நடித்து முடித் தோம்.''

— தொகுப்பு : எஸ். சந்திரமௌலி

# டயட்

## விதிமுறைகள் அவசியமா?

கேள்வி: உடம்பை ஸ்லிம்மாக வைத்துக் கொள்ள விரும்புகிறவர்களுக்குத் தாங்கள் கூறும் யோசனை என்ன?

பதில்: சரியான நபரிடம்தான் வந்து கேட்டீர்கள். முன்னாடியெல்லாம் நான் ஸ்லிம்மாகத்தான் இருந்தேன் என்றால் நம்ப மாட்டீர்கள் இல்லையா? அப்பவெல்லாம் வீட்டைச் சுற்றித் தினமும் காலையில் பத்து ரவுண்டு ஓடுவேன்....

கேள்வி: அப்புறம் ஏன் நிறுத்திவிட்டீர்களாம்?

பதில்: சரியாப் போச்சு, மற்ற வீட்டுக்காரர்கள் எல்லாம் நான் ஓடுவதனால் கட்டிடம் குலுங்குவதாகக் கம்ப்ளெயின்ட் பண்ணினால் நான் எப்படித் தொடர்ந்து ஓட முடியும்?

கேள்வி: எப்போதெல்லாம் நீங்கள் உணவு உட்கொள்கிறீர்கள்?

பதில்: எப்போதெல்லாம் சாப்பிட மாட்டேன் என்று வேணுமானால் சொல்கிறேன், அதுவும் கஷ்டம்தான்!

கேள்வி: சத்துள்ள உணவு என்று நீங்கள் கருதுவது எதை? எதை?

ப: அப்படிப் பார்த்துப் பார்த்துச் சாப்பிட்டிருந்தா இப்ப இப்படி பேட்டி கேட்பீர்களா, என்ன? இடைச்சதை யெல்லாம் சாப்பிடக் கூடாதுங்கறதுதான் என் பிரின்சிபிள்... முடியுதா?

கேள்வி: விட்டமின்களைப்பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன?

பதில்: அதை வேறே தனியாச் சாப்பிடறது அவசியமில்லே.

கேள்வி: உடம்பு பருக்காமல் இருக்க ஏதாவது யோசனைகள்?

பதில்: வீட்டில் சாப்பிடுபவர்கள் ஓட்டல்லேயும் சாப்பிடக் கூடாதுன்னு ஒரு வைராக்கியம் வச்சுக்கணும். அப்படியும் வீட்டுக்கு விருந்தாளிகள் வந்தா அவங்க கூடவே தாங்களும் வெட்டறது ஒரு ரசனையாப் போச்சு. விருந்தாளிங்க வந்தாப் பத்தியச் சாப்பாடு போடலாம். நமக்கும் நல்லது. அவங்களும் அடிக்கடி வரமாட்டாங்க.

கேள்வி: உடம்பு பருக்காமல் இருக்க யோகாசனங்கள் செய்யறது பற்றி என்ன சொல்றீங்க?

பதில்: முடிஞ்சவங்க செய்யலாம். முடியாதவங்க அப்பப்ப பத்திரிகைகள்லே



வர்ற யோகாசனப் படங்களைப் பார்த்துப் பெருமூச்சு விட்டாலே போதும்.. மெலிஞ்சுடுவாங்க.....

கேள்வி: சமூகப் பிரக்ஞை வர்ற மாதிரி ஏதாவது செய்தா நல்லா இருக்குமே!

பதில்: கரெக்ட்! 'ஸ்லிம்மர்ஸ் கிளப்'னு ஒண்ணு ஆரம்பித்து அதிலே சேர்மனாக இருக்கணும்னு ஒரு ஐடியா இருக்கு: தவிர, 'தோஞ்சான்' என்கிற பேர்லே ஒரு வாரப் பத்திரிகைக்கு ஆசிரியராகச் செயலாற்றவும் ரொம்ப பேர் என்னை வற்புறுத்தறாங்க.... எனக்கோ சாப்பிடவே டயம் இல்லே...

கேள்வி: அப்படியா ரொம்ப சந்தோஷம்! அபூர்வமான யோசனைகளுக்கு எங்கள் பாராட்டுக்கள்!

பதில்: எப்ப வேணுக் கேளுங்க. நிறையச் சொல்றேன்!

(நான் அவரைத் தேடிப் போக அவசியமின்றி எனது கற்பனைக் கோட்டையை நாடி வந்து பேட்டி தந்த உசிலை மணிக்கு ரொம்ப தாங்க்ஸ்!)

-விஜய்

புகைப்படம்: யோகா

# எப்போதும் தாய்!

அரவிந்தன்



பொழுது புலருவதற்கு இன்னும் நேரம் இருந்தது!

சௌந்தருக்குத் தூக்கம் கலைந்துவிட்டது!

மணி நாலேகால்!

ராதை இருந்தவரை வாழ்க்கை இவ்வளவு கனமானதாக அவனுக்குத் தோன்றியதே இல்லை.

ராதை....

குழந்தை சவியையும் தாம்பத்தியத்தின் சுகமான அனுபவங்களையும் மட்டுமே அவனுக்காக விட்டு விட்டு ஒரே நாளில் ஒரு கணத்தில் மரணப் பிடியாய்ப் போட்ட நெஞ்சு வலியில் ஒரு வார்த்தைகூடப் பேசாமல் கண் மூடிவிட்ட அந்தக் கல் நெஞ்சக்காரியைப் பற்றி நினைக்கவே வேண்டாம்!

கீழ்ப் பார்வையாகக் கண்களைத் தாழ்த்தி சவியைப் பார்த்தான் சௌந்தர்.

அப்படியே அந்தக் கடன்காரியை உரித்து வைத்துக் கொண்டு பிறக்குமா இப்படி?...

அருகில் இருந்த சவியின் முகம் ஒரு கணம் மறந்துபோய் அங்கே ராதையின் முகம் தெரிந்தது!

பாவி... இப்படியேதான் கையையும் காலையும் போட்டு அவனைச் சிறைப்படுத்துகிற மாதிரி கட்டிக் கொண்டு தூங்குவாள் அவளும்!

இதோ குழந்தையும் கூட அவளை மாதிரியே!

சௌந்தரால் ராதையைப் பற்றி நினைக்காமல் இருக்கவே முடியவில்லை.

அதே சமயம் அவள் இல்லாத வெறுமையை வென்று ஜெயிக்கவும் அவனால் முடியவில்லை.

சில சமயம் ஒரு பெண்மையின் சுகத்திற்கு அவனுடைய உள்ளமும் ஆலாய்ப் பறந்து தவித்ததும் உண்டு!

ஆனால் அடுத்த கணமே குழந்தை சவியின் பரிதாபமான முகம் அவன் முன்னால் தெரியும்!

''எவளாய்த்தான் இருந்தால் என்ன?– சவி அநியாயமாகக் கொடுமைப்படுத்தப்பட்டு அடிபட்டு – இடிபட்டு... ஐயோ... வேண்டாம். சவி வெறும் பெண் அல்ல– அவள் ராதையின் ஒரு பகுதி. நானும் ராதையும் சேர்ந்துகளித்ததன்விளைவாகத்தன்னில்கொஞ்சமும் ராதையில் கொஞ்சமுமாகக் கொண்டு விளைந்த செல்வம் அவள். அவள் அடிபடுவதும், கொடுமைப்படுவதும் ராதையே அனுபவிக்கிற மாதிரி. என்னுடைய சுகத்துக்காக இந்தப்பாதகமான செயலை ஒருகாலும் நான் செய்ய மாட்டேன்!'' என்று வாய் விட்டுப் புலம்புவான் சௌந்தர்.

ராதை அவனை விட்டுப் போய் ஒரு வருஷம் ஆகப்போகிறது.

இந்த இடைவெளியில் சௌந்தரைச் சேர்ந்த சொந்தக்காரர்கள் அவ்வளவு பேரும் அவனை இரண்டாம் கல்யாணம் செய்துகொள்ளச் சொல்லி வற்புறுத்திச் சலித்து விட்டார்கள்.

அறையின் முகப்பில் பூவும் பொட்டுமாய் அவனைப்பார்த்துக்குறும்பாகச் சிரித்தபடி நிற்கும் ராதையின்மார்பளவுப் போட்டோவைப் பார்த்தாலே அவன் எண்ணங்கள், ஆசைகள் எல்லாமே சட்டென்று வடிந்து போய்விடும்!

ஆனால் சமீபகாலமாக அவன் ஆபீஸில் இந்து என்றொருத்தி புதிதாக வந்து வேலைக்குச் சேர்ந்ததற்குப் பிறகு அவன் மனம் கொஞ்சம் கொஞ்சமாகத் தடுமாறத் தொடங்கி இருந்தது உண்மை!

'இந்து ஓர் இளம் விதவை' என்ற ஒரு காரணம் மட்டுமே அவன் எண்ணங்களுக்கு ஆதாரமான காரணம் இல்லை என்றாலும் அவள் மீது அவனுக்குத் தனியான பார்வை விழ இந்தக் காரணம்தான் முக்கியமானது என்பதை மறுப்பதற்கில்லை.

இந்து சிவப்பை இழந்துவிட்ட வெள்ளை ரோஜா போல் குங்குமத்தையும்; புன்சிரிப்பையும் இழந்து முதன் முதலாக அவன் ஆபீஸுக்குள் நுழைந்த அன்றே அவன் அவளைப் பார்த்தான்.

அமைதி, பொறுமை, அடக்கம் – இவைகளை அவளைப் பார்த்தபோதே உணர முடிந்தது.

இந்துவின் செக்ஷன் அதிகாரியாக இருந்த ராகவன் பதவி உயர்வு பெற்று வேறு செக்ஷனுக்குப் போனார்.

சௌந்தர் அவர் இடத்துக்குப் பிரமோஷனாக இந்துவின் செக்ஷனுக்கே அவளுக்கு உடனடியான அதிகாரியாக வந்து சேர்ந்தான்.

அன்று இந்து மிகவும் கவலையோடும் சோர்வாகவும் இருந்தாள். வேலையிலும் நிறையத் தவறுகள்.

சௌந்தரும் அன்றைக்கு என்னவோ அவ்வளவு நல்ல 'மூடி'ல் இருக்கவில்லை. மேலும் தலைமை அலுவலகம் போகிற முக்கியமான வேலையில் அதுபோன்ற தவறுகள் இருப்பதைப் பார்த்து அவனுக்குக் கோபம் 'சுள்' ளென்று வந்து விட்டது.

''இர்ரெஸ்பான்ஸிபிள்'' என்று ஆத்திரத்துடன் கத்தியபடியே அந்தக் காகிதத்தை அப்படியே கசக்கி அவள் முகத்தில் வீசாத குறையாக அவள் மேஜை மீது வீசி நடு ஆபீஸ் என்று கூடப் பார்க்காமல் கன்னாபின்னாவென்று கத்திவிட்டான்.



சட்டென்று இரண்டு துளிச்சூடான கண்ணீர் தன்னுடைய மேஜைக் கண்ணாடியில் பட்டுத் தெறிக்க—

''ஸாரி சார்....'' என்று உதடுகள் நடுங்க பயத்தில் நடுங்கிய விரல்களைச் சிரமப்பட்டு மேஜை மீது ஊன்றிச் சமாளித்தபடி நின்று கொண்டிருந்த அவளை நிமிர்ந்து பார்த்த அந்த அடுத்த கணமே அவன் கோபமும் ஆத்திரமும் 'சட்'டென்று வடிந்து போய் அவன் மனம் முழுவதிலுமாய் அவள் மீது அன்பும் அனுதாபமுமாகப் பொங்க...

''வெரி ஸாரி இந்து.... நானும் இப்படி உங்ககிட்டே பிஹேவ் பண்ணியிருக்கக் கூடாது. ஏதோ நானும் இன்றைக்கு நல்ல மூடிலே இல்லே.... ப்ளீஸ் எக்ஸ்க்யூஸ் மீ...'' என்றான்.

அன்று மாலையே அவர்கள் இருவரும் அந்த பஸ் ஸ்டாப்பில் சந்தித்துக் கொண்டார்கள்.

வேறொரு நாள்—

கொட்டும் மழையில்—

பஸ் – ஆட்டோ – டாக்ஸிகள் ஸ்ட்ரைக் செய்த வேறொரு தினத்தில் அவளுக்கு வீட்டுக்குச் செல்ல உதவியதில்—

இந்துவின் பையனின் ஸ்கூல் பஸ் மவுண்ட் ரோடில் விபத்துக்குள்ளாகி நிற்கிறது என்று கேள்விப்பட்டு அவள் தன் ஒரே பிள்ளையை நினைத்துக் குமுறியபோது ஆறுதல் சொல்லி ஆஸ்பத்திரிக்கு அவளுடன் ஓடி அவள் பையனுக்கு ஒன்றுமில்லை என்று தெரிந்து சந்தோஷப்பட்டதில்—

அவளும் அவனும் ஆளுக்கு ஒரு துணையை இழந்துவிட்டு அவரவர் ஒரு குழந்தையுடன் நிற்கிற அவலத்தைப் பகிர்ந்து கொண்டு



ஒருவருக்கு மற்றவர் கூறிய ஆறுதல் மொழிகளில்....

அவர்கள் அடிக்கடி சந்தித்துக் கொண்டார்கள்.

அவரவர் தம்முடைய பிரச்னையை மற்றவரிடம் பகிர்ந்து கொள்கிற அளவுக்கு அவர்கள் சகஜமாகி விட்டார்கள்.

'வெறும் இரண்டாம் கல்யாணமாக இல்லாமல் — உடல் வேட்கை என்ற லட்சியத்துக்காக மட்டும் இல்லாமல், அவளுக்கும் தனக்கும் அவரவர் இழப்பை ஈடு செய்கிற ஓர் உன்னதமான உறவாக இது ஏன் அமையக் கூடாது?' — என்ற நியாயமான கேள்வியும் அவன் மனத்தில் அடிக்கடி கேட்டது!

இப்போது சிலநாளாய்ச் சரியான தூக்கம் இல்லாமல் அவன் இப்படி அடிக்கடி நடு இரவிலும், விடிவதற்கு வெகு நேரம் முன்பாகவும் எழுந்து கொண்டு தவிப்பதற்கு இந்தக் கேள்வியேதான் காரணம்.

'அவளிடமே கேட்டுவிடலாமா?'

'சீக்கிரம் இது விஷயமாக இந்துவிடம் பேசி ஒரு முடிவுக்கு வந்துவிட வேண்டும்' என்று தனக்குள் தீர்மானித்துக் கொண்டபடி கட்டிலை விட்டு எழுந்தான் சௌந்தர்.

பாய்லருக்குக் கரியைப் போட்டுத் தண்ணீர் மொண்டு ஊற்றி பாலை வாங்கி வந்து ஸ்டவ்வைப் பற்றவைத்துக் காப்பி போட்டு, இடையிலேயே சமையலுக்கும் ஏற்பாடு செய்து கொண்டு பக்கத்து வீட்டு சுசீலா வாசலில் கோலம் போட்டு இருக்கிறாளா என்று பார்த்து உறுதி செய்து கொண்டு ஒரு கையில் ஹார்லிக்ஸும் மறு கையில் காப்பியுமாகக் கொஞ்ச நேரம் நின்று படுக்கையில் இருந்தபடி ''அப்பா''வைத் தேடும் சசிக்கு முத்தமிட்டு 'குட் மார்னிங்' சொல்லி அவளை எழுப்பி அவள் ஜெட்டியைத் தளர்த்தி விட்டு...

வழக்கமாக இவை எல்லாவற்றையும் செய்யும்போது தோன்றாத ஒரு நினைவு கடைசியாக சசியின் ஜெட்டியைத் தளர்த்தி விடும் போது அவனுக்குத் தோன்றியது.

இன்னும் எவ்வளவு நாட்களுக்கு? இன்றைக்குக் குழந்தை சசி நாளைக்கு ஒரு பெண்—

இன்னும் எவ்வளவு நாளைக்கு அப்பா மட்டுமே அவளுக்குப் போதுமானதாக இருக்க முடியும்?

தன்னம்பிக்கைக் குறைவே அதிருப்தி;
அது நெஞ்சுறுதியின் குறைபாடு. -எமர்சன்
-கணியூர் பரூக்




சசிக்கும் ஒரு அம்மா வேண்டும்!

சௌந்தரின் தீர்மானங்கள் நிஜமாகவே உறுதியாகி விட்டாற்போல்தான் தெரிந்தது.

சௌந்தருக்கு வேலையில் கவனமே செல்லவில்லை. அவளிடம் எப்படிச்சொல்வது? எப்படி இதை ஆரம்பிப்பது என்ற தயக்கத்துடனேயே அன்றையப் பொழுது கழிந்து போனபோது தன்னையும் அறியாமல் ஒரு கையாலாகாத்தனத்துடன் தளர்ந்துபோய் வெளியே வந்தான் சௌந்தர்.

நேராகக் கிரீச்சுக்குப்போய்க் குழந்தையை எடுத்துக் கொண்டான்.

வீட்டுக்குப் போக மனம் விரும்பவில்லை.

நேராகக் கடற்கரைக்குப் போய்க் கொஞ்ச நேரம் யோசித்தால் என்ன?

''ஐடியா!''—

சௌந்தர் தனக்குத் தானே ஒரு சபாஷ் போட்டுக் கொண்டு நடந்தான்.

கடற்கரை மணல் சூடாக இருந்தது.

மாலை வெகு நேரமாகியும் சூரியனின் கோபம் இன்னும் மிச்சம் இருந்தது.

கடல் மணலில் நடக்க அடம் பிடித்துக் கையையும் காலையும் உதறிக் கொண்டு அழுத சசியை இறக்கிவிட்டு அவளிடம் ஆள் காட்டி விரலை நீட்டிப் பிடித்துக்கொள்ளச் செய்து மெதுவாக அவள் வேகத்துக்கு மணலில் கால்கள் புதையப் புதைய நடந்த போது....

ராதையுடன் கல்யாணமான புதிதில் இதே கடற்கரை மணலில் கை கோத்துக்கொண்டு நடந்த நினைவுகள் அவன் நெஞ்சில் அலை மோதின.

'சட்'டென்று அவன் உடம்பில் மின்சாரம் பாய்ந்தாற்போலிருந்தது.

பார்வையைக் கூர்மையாக்கிக் கொண்டு பார்த்தான்.

சந்தேகமே இல்லை—

இந்துதான்.

இந்துவேதான்.

கையில் பையனுடன் வந்து கொண்டு இருந்தாள் இந்து.

அவளும் அவனைப் பார்த்துவிட்டது அவள் உதட்டோரம் லேசாகப் பிரிந்து சேர்ந்ததில் தெரிந்தது.

அவள் புன்னகை அவ்வளவுதான்!

''ஏது இவ்வளவு தூரம்?....''

சௌந்தர் இயல்பாகவே பேச்சை ஆரம்பித்தான்.

''இதோ இவன் பிடிவாதம்தான்!''

இந்து கைப்பிடியில் இருந்த பையனுக்கு விடுதலை தர, சிறுவன் ஓடிப்போய் சசியுடன் சேர்ந்துகொண்டு விளையாட....

இந்து சௌந்தருக்குச் சற்றுத் தள்ளி உட்கார்ந்து கொண்டாள்.

இருவரும் கொஞ்ச நேரம் பொதுவாகப் பேசிக் கொண்டிருந்து விட்டு மௌனமாக இருந்தார்கள்.

''உங்களிடம் ஒரு விஷயம் கேட்டால் தப்பாக நினைத்துக் கொள்வீர்களா ஸார்!''

சட்டென்று அவன் பார்வை உயர்ந்து அவள் மேல் பதிந்து அந்த மெலிதான இருளில் அவள் முகத்தின் உணர்ச்சிகளைத் தேடியது அவசரம் அவசரமாக!

# சிற்பக்கலைநயம்வாய்ந்த ஜபரேஷ்வரா கோயில், மஹாராஷ்ட்ரா

அக்காலத்து கலைத்திறனை இக் கோயிலின் கற்கள் பேசுகின்றன. பூ வேலைப்பாடுகளும், வடிவமைப்புகளும், அதிநுட்பமான கட்டிடக்கலை வல்லமையும் கலைஞர்களின் கலை ஆர்வத்தின் பிரதிபலிப்பாகத் திகழ்கின்றன. இவ்வாறுகத்தான் காலங்காலமாக கல்லிலே கலை வண்ணம் கண்டு வழிவழி மரபை உலகறியச் செய்துள்ளனர்.

பழங்கால மரபுகளை மனதில் கொண்டு தாவண்கெரே காட்டன் மில்லில் புராண அழகை பிரதிபலிக்கும்படியான துணி வகைகளைத் தயாரித்தளிக்கிறோம். நுட்பமான நெசவு, கலைஞர்களின் கைவண்ணம்— எண்ணிலடங்கா துணி வகைகள். ஒவ்வொருவரும் பாராட்டும் வண்ணம்.

சிறந்த துணிமணிகளை உயர்ந்த மரபாகக் கருதுவது **தாவண்கெரே**

தி தாவண்கெரே காட்டன் மில்ஸ் லிமிடெட்,
ஹனுமந்தப்பா கட்டிடம், சித்தார்த்தா ரோடு,
தாவண்கெரே-577 002.

ஷோரூம்:
காவேரி பவன், பெங்களூர் 560 009.
தாஜிபான்பேட், ஹுப்ளி 580 020,
சித்தார்த்தா ரோடு, தாவண்கெரே 577 002.



ஜபரேஷ்வரா கோயில், பாய்டான், [illegible] ஜில்லா, மஹாராஷ்ட்ரா

''ஸார்! நீங்க உங்க பெண் சனியை நினைச்சு ரெண்டாம் கல்யாணம் கூடப் பண்ணிக்க மாட்டேன்னுட்டீங்கன்னு கேள்விப்பட்டதிலிருந்து உங்க பேரிலே ரொம்ப மதிப்பும் மரியாதையும் உண்டு ஸார்.... எனக்கு.....''

''எஸ்.....''

''இல்லே ஸார்... நீங்க ஒரு ஆம்பிள்ளே. அதுவும் தனியாக இருந்துக்கிட்டு இந்தப் பெண்ணை வளர்க்க எவ்வளவு சிரமப்படுவீங்கன்னு எனக்கும் புரியுது ஸார்....''

''அதுக்காக....?''

'சொல்லப் போகிறாள், சொல்லப் போகிறாள்' என்று சௌந்தரின் மனத்துக்குள் பத்துப் பதினைந்து குதிரைகள் கடிவாளம் இல்லாமல் தத்தம் பிடரியைச் சிலிர்த்தபடி புழுதி பறக்க 'தடக் தடக்'கென்று ஓடியது.

''ஸார்! உங்களுக்கு ஆட்சேபணை இல்லையென்றால் சனிக்குக் கொஞ்சம் விவரம் தெரிகிறவரைக்கும் அவளை என்கூட வைத்துக்கொள்ளட்டுமா? என்று கேட்க நினைத்தேன். நீங்க என்ன சொல்லுவீங்களோன்னு பயமாக இருந்தது ஸார்!''

படிப்படியாக ஏறிய சௌந்தரின் உற்சாகம் 'பட்'டென்று வெடித்துச் சிதறிவிட்டது!

'நாம் கல்யாணம் பண்ணிக் கொள்வோமா என்று கேட்கத் துப்பில்லே. என் குழந்தையை இவள் வளர்க்கிறாளாம். ஸ்டுபிட் நான்சென்ஸ்....!'

சௌந்தருக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது.

''ஸார்....!''

இந்து சற்றுப் பயத்துடன் அவனைப் பார்த்தாள்.

சௌந்தர் தன் மனத்துக்குள் எவ்வளவு உணர்ச்சிக் கொந்தளிப்புகள் இருந்தாலும் அதை அவளிடம் அப்போதைக்குக் காட்டிக் கொள்ள விரும்பவில்லை.

''ஒண்ணுமில்லே.... ஒண்ணு மில்லே.... இட்ஸ் ஆல் ரைட். உங்களுக்கு எங்கள் மீது இருக்கிற நல்லெண்ணத்துக்கும் அக்கறைக்கும் ரொம்ப ரொம்ப நன்றிகள் இந்து. எங்களுக்கு நேரமாச்சு நாங்க கிளம்புகிறோம். சனி... கெட் ரெடி!''

தன்னுடைய அப்போதைய மனநிலையில் எப்படி இவ்வளவு நிதானமாகவும் பொறுமையாகவும் பேச முடிந்தது என்பது அவனுக்கே மிகவும் ஆச்சரியமாக இருந்தது.

அவன் கிளம்பி விட்டான்.

''ஐயையோ... கண்ணிலே மண்ணு பட்டிருச்சா?''

குழந்தை சனி மிகவும் பரிவுடன் இந்துவின் ஐந்து வயது மகனைப் பற்றி அவன் கண்களைப் பரிவுடன் துடைத்து விட்டுக் கொண்டிருந்தாள். தன்னுடைய சிறிய பாவாடை நுனியால் அவன் கண்களை ஒற்றிக் கொடுத்தாள்.

தன்னுடைய அப்போதைய மன நிலையில் தன் குழந்தையின் பரிவையும் பாசத்தையும் பார்த்து ரசிக்கிற பொறுமை சௌந்தருக்கு இருக்கவில்லை.

பரபரவென்று சனியை இழுத்துக்கொண்டு ஓட்டமும் நடையுமாக நடந்தான்.

அவன் போவதையே பார்த்துக் கொண்டிருந்த இந்துவுக்கும்கூட அவன் அவசரத்துக்கும் பரபரப்புக்கும் காரணம் தெரியவில்லை.

கடற்கரையில் இந்து தன்னிடம் பேசியதும் அவன் நினைவுக்கு வந்தது.

சனி காட்டிய பரிவும் பாசமும் நினைவில் வந்து மறைந்தது.

இதை யெல்லாம் வைத்து நிதானமாக யோசித்துப் பார்க்கும்போது அவனுக்கு ஒரே ஒரு விஷயம் தெளிவாகப் புரிந்தது.

ஒரு பெண் தன்னுடைய எந்த வயதிலும் ஒரு தாயாகவே இருக்கிறாள்.

அவனை ஒரு பெண்ணாகவும், இஃப்ப் பொருளாகவும் மாற்றி, அவள் பெண்மையை நினைவுபடுத்தி அதைத் தூண்டிவிட்டு, அவள் பெண்மையை உணரச் செய்யும் போது அவன் ஒரு யதார்த்தமான பெண்ணைப் போல் களித்தாலும் மீண்டும் மீண்டும் அவள் தாய்மைக் கோலத்துக்குள்ளேயே அடைக்கலமாகிவிட விரும்புகிறாள் என்பதும் அவனுக்குப் புரிந்தது.

இந்த நிலையில்—

இந்து தன்னைப் பார்த்து ''நாம் கல்யாணம் செய்துகொள்வோமா?'' என்று கேட்காமல் சனியைப் பற்றிக் கவலைப்பட்டதும், அவளை வளர்ப்பதாகக் கேட்டதும் அவளிடம் விஞ்சி நிற்கும் இந்தத் தாய்மை நிலையின் உந்துதலால் ஏற்பட்டதுதான் என்றும்—

இந்துவைப் போல ஒரு பெண் இப்படியன்றி வேறு எந்த விதமாகவும் கேட்க முடியாது என்பதும் அவனுக்குப் புரிந்தது.

நாம் கல்யாணம் பண்ணிக் கொள்வோமா என்ற கேள்வி தன்னைப் போன்ற ஓர் ஆணிடமிருந்து வரக் கூடிய கேள்வி என்றும் அவனுக்குத் தெரிந்தது.

ஆம்.—

பெண் — எப்போதும் தாய்!

ஆனால்—

ஆண் — எப்போதும் தந்தையல்லவே!

''இப்ப புடவை வாங்கிக் கொண்டு போனவர்கள் கணவன் மனைவி இல்லே. காதலர்கள் என்று எப்படிச் சொல்றே?''

''இவர் வாங்கித் தந்த புடவையை மறு வார்த்தை சொல்லாமல் அவள் வாங்கிக் கொண்டு போறாரே. மனைவி என்றால் சும்மா விடுவாளா?''

-லலிதா செல்லப்பா



வெகு விரைவாக நடந்து வீதி முனையை அணுகும்போது அரியலூர் பஸ் எதிர்ப்பட்டது. ஒரு கணம் தயங்கினான். அந்த அதிகாலை நேரத்திலும் கடை முகப்பில் பற்பல நாளேட்டு விளம்பரங்கள் தொங்கின. அவற்றின் பெயர்களில்தான் எத்தனை புதுமை? தீக்கதிர், செஞ்சுடர், விண்ணொளி. செய்தித் தலைப்புக்களைப் படித்தவாறே முகப்பைக் கடக்க முற்படும்போது வீரண்ணன் அவனை அழைத்தான். ''இதோ பார், உன் கதை வெளிவந்திருக்கிறது.''

அவன் நடையை நிறுத்தித் திரும்பினான். பளபளப்பான அட்டையுடைய அந்தப் பத்திரிகையை எடுத்து ஒரு பக்கத்தைப் பிரித்து அவனிடம் காட்டினான் வீரண்ணன். அவனுடைய நாவு அண்ணத்தில் ஒட்டிக் கொண்டது. வீரண்ணன் சொன்னது உண்மைதான். அந்தப் பக்கத்தில் அவன் எழுத்தும், பெயரும் பெரிய அளவில் வரைந்த பெண்ணுருவமும்....

உள்புறம் ஏதோ சலசலப்பு. ஒருக்களித்த நிலைக்கதவு வழியாக அவள் எட்டிப் பார்த்தாள். நிலாத்துண்டு நுதல், செவி மடல்களை மூடியிருந்த நெளிகுழல் அதை அழகு செய்த மலர்ச் சரம். மஞ்சுளா எதிரே நின்றாள்.

அவன் இதை எதிர்பார்க்கவில்லை. அவளே மௌனத்தைக் கலைத்தாள். 'நான் நேற்றே ஏர்போர்ட்டில் படித்தேன். நெஞ்சை உருக்கும் நடை. இப்போது வீரண்ணனும் திரும்பிப் பார்த்தான். அவள் தொடர்ந்து பேசினாள். 'நடக்கிறதைத்தானே அவர் எழுதியிருக்கிறார்!' அவளுடைய குரலில் ஒரு கமறல்.

பின்னால் இன்னொரு உருவம் தோன்றியது. நெடிய வடிவம். கடுகடுப்பான முகம். தோளில் கிடந்த துவாலையினால் முகத்தைத் துடைத்தவாறு அவனை ஏறிட்டுப் பார்த்தார். 'நீ எதற்காக இங்கு வந்தாய்?' என்று அவருடைய விழிகள் வினவின. ஒருக்களித்திருந்த கதவை அழுத்திச் சாத்தினார். அப்படிச் செய்ய அவருக்கு உரிமை உண்டு. அது அவருடைய வீடு. வீரண்ணன் அந்தத் திண்ணையை மட்டும் கடையாக உபயோகித்துக் கொள்வதற்கு வாடகை கொடுக்கிறான்.

பத்திரிகையுடன் நகர இருந்த அவனை வீரண்ணனின் குரல் நிறுத்திற்று. ''தம்பி! காசு கொடுக்க மறந்திட்டியே!''

பையில் கையை விட்டு அதிலிருந்த ஒற்றைத் தாளை எடுத்துக் கடைக்காரனிடம் கொடுத்து விட்டு அவன் திரும்பி நடந்தான். தெளி தண்ணீர் மதகைக் கடந்ததும் உப்பும் மணலும் விரவியிருந்த தென்னை மரத்தடியில் உட்கார்ந்து பத்திரிகையைப் பிரித்தான். செம்போத்து ஒன்று சிறகடித்துப் பறந்தது. அருகிலிருந்த வாவிக் கரையில் வெண் கொக்கு ஒன்று வந்து அமர்ந்தது. தொலைவில் கருடனின் கூவல். கிறங்க வைக்கும் கவிதைச் சூழல்.

...பல ஆண்டுகளாக அவனும் எழுதி வருகிறான். பார்க்கப் போனால் வாழ்க்கையில் அவனுக்கு ஒரு பிடிப்பைக் கொடுத்ததே இலக்கியம்தான். புதுமைப் பித்தனிலிருந்து இன்றைய ஜெயந்தன் வரை அவன் அறிவான். பி. எம். கண்ணனின் பெண் தெய்வத்தின் பல வரிகள் அவனுக்கு மனப்பாடம். ரீதிகௌளை ராகத்தைக் கேட்கும்போதெல்லாம் சாவித்திரி அம்மாளின் கண்ணீரால் நனைந்த கடிதம் அவன் நினைவுக்கு வரும்.

அவன் எழுதும் கதைகளிலும் நெஞ்சைக் கிளர்த்தும் கருத்து அம்சம் நிறைய இருக்கும். உயிரோட்டமும், தெளிவும், ஆழமும், மின்னலும் நிலவும். ஆனால் அச்செழுத்தில் எதுவுமே வெளிவராது. எழுத்துத் துறையில் இத்தனை ஆண்டுகள் ஈடுபட்ட பிறகும் பத்திரிகை ஆசிரியருக்குப் பிடித்தது எது என்று அவனால் நிர்ணயிக்க முடியவில்லை. பலருடைய சலவைக் கணக்கு, ஜமலி பிலாக்கணம் ஆகியவற்றைப் புகைப் படங்களுடன் வெளியிடும் பளபள ஏடுகள் இவனை ஏறிட்டுக்கூடப் பார்ப்பதில்லை. அஸ்தினாபுரம் சகோதரர்கள் எழுதும் சங்கலித் தொடரிலும் இவன் பெயர் இராது. என்றாலும் அவன் எழுதினான். ஏனென்றால் எழுதாமல் அவனால் உயிர்க்க முடியவில்லை.

பத்திரிகையை மூடிப் பக்கத்தில் வைத்து விட்டுக் கண்ணை இறுக்க மூடிக்கொண்டு உட்கார்ந்தான். ஆழமான நீர்ப்பரப்பு. அதில் வாட்டர் ப்ரூஃப் செய்யப்பட்ட வட்டமான பசும் இலைகள், நடுவே பளபளக்கும் வைர மணிகள். இடையிடையே இளம் சிவப்புப்புறவிதழும் வெண்மையான உட்புறமும் கொண்ட மலர்கள். அரைக் கச்சை மட்டும் அணிந்த சிறுமி ஒருத்தி முரண்டு பிடிக்கிறாள். 'பூ வேணும்' அவள் சிணுங்குகிறாள். தாயார் சினந்து கொள்கிறாள்.

'குபுக்' என்று ஓர் ஒலி. சிறுவன் நீரில் துழாவிச் செம்மலர்களைப் பறித்துக் கரைக்குக் கொண்டு வருகிறான். சிறுமியின் முகமும் அந்தச் செங்கமலத்தைப் போலவே மலர்கிறது. அவன் தலையை அசைக்கிறான். நாளைக்கும் மீண்டும்....

மறுபடியும் குளக்கரை. மக்கள் பரபரப்பாக உலாவுகிறார்கள். குடை சாய்க்கப் பட்ட வண்டிச் சக்கரமொன்றில் பெண்ணின் உடல் ஒன்று சுழல்கிறது. விரி கூந்தல், ஆடை குலைந்த நிலை. பாழ் நெற்றி. வெகு நேரம் சுற்றிய பிறகும் நிராசை அடைந்த முகங்கள். செந்தலை தென்படுகிறது. நடு வயதைக் கடந்த மாதொருத்தி புலம்புகிறாள். 'அடி பாவி கெடுத்தியே' யாரோ ஒருவர் அவன் கையைப் பிடித்து அந்தச் சக்கரத்தருகே அழைத்துச் செல்கிறார். 'பாவம், இனிமேல் இவன் தாயில்லாப்பிள்ளை.'

மீண்டும் அதே குளக்கரை. அதை அடுத்த புழுதி மண் சாலையில் இரட்டை மாடு பூட்டிய வில் வண்டி. புதிய வர்ணத்தில் மணம். வண்டியினுள் அந்த இளநங்கை. பாக்கு நிறத்தில் பாவாடை. அதன் மேல் பட்டுத் தாவணி. கால்களில் சலங்கை. பக்கத்தில் கருதிப்



பெட்டி. நட்டுவனர், வண்டி மாடு களின் கழுத்து மணி ஓசை கேட்கிறது. அவனை நிமிர்ந்து பார்த்துவிட்டு அவன் மீண் டும் எழுதுகோலை ஓட்டுகிறான். இட்ட அடி நோக... அவளுடைய பார்வை இவனுக்குள் புதிய ஒளியைக் கிளர்த்துகிறது.

மூடிய கண்ணெதிரே ஏடுகள் சலசலக் கின்றன. பல ஆண்டுகள் பறக்கின்றன. நண்பன் ஒருவன் அவனைக் கேட்கிறான். ''இன்று அவளுடைய அரங்கேற்றம், நீ போகவில்லையா?''

''எனக்கு அழைப்பு வரவில்லையே!''

''அவள் உன்னை எதிர்பார்ப்பாள் என்பது உனக்குத் தெரியுமல்லவா?''

''எப்போதுமே அவள் என்னை எதிர்பார்த் துக்கொண்டுதான் இருக்கிறாள்'' தனது கறுக்கு மீசையைத் தடவுகிறான் அவன்.

...ஏடுகள் மீண்டும் சலசலக்கின்றன. தனது தடிமனான நோட்டுப் புத்தகத்தைத் துண்டு துண்டாகக் கிழிக்கிறான். அதற்குக் காரணமாயிருந்த உரையாடல் அவன் செவி யில் ஒலிக்கிறது. ''இந்தப் பாட்டெல்லாம் எங்கள் படத்துக்குப் பயன்படாது!''

''நீங்கள் விரும்பும் அளவுக்குப் பச்சை யாக எழுத எனக்கு மனம் வரவில்லையே!''

''நாங்கள் என்ன வள்ளலார் வரலாறு எடுக்கிறோம், இல்லை தாயுமானவரா?''

அவன் நினைக்கிறான், வள்ளலாரும் மனம் கசந்துதான் பாடினார். 'கடை விரித்தோம், கொள்வாரில்லை, கட்டிவிட்டோம்!'

கிழிபட்ட காகிதத் துண்டுகளை நீரில் வீசுகிறான். ஓரிரு மீன்கள் காகிதத்தின் அரு கில் வந்து முட்டிவிட்டுத் திரும்ப விரை கின்றன. அவற்றை மீன்களும் சீந்துவ தில்லை.

# சன்மானம்

தி. சா. ராஜு



ஏடுகள் ஓடுகின்றன. முத்துச் சரத்தைக் கோத்த அந்தக் கடித எழுத்தை அவன் படிக்கிறன். 'நாட்டியம், கலை நிகழ்ச்சி, என்பதெல்லாம் வெளி வேஷம். அடிக்கடி என்னை பம்பாய்க்கு விமானத்தில் அழைத்துச் செல்லுகிறர்கள். சொகுசான ஹோட்டல். அரபு நாட்டிலிருந்து வருகிற அந்தச் செல்வந்தர்கள் விரும்புவது என் நாட்டியத்தை அல்ல. உன்னுல்தான் என்னைக் காப்பாற்ற முடியும்....

இப்போது அவன் கண்களிலிருந்து படிகச் சரம். சே, ஆண்பிள்ளை அழக் கூடாது. அதுதான் அவனுடைய தாயின் போதனை.



''குடிக்காத, ரேஸுக்குப் போகாத, காசு வச்சுச் சீட்டு ஆடாத நல்லவனு இருபத்தெட்டு வயசுக்குள்ளே ஒரு பையனைப் பாருங்க!''

''நம்ம பொண்ணுக்குங்களா?''

''ஊகூம்: நம்ம கம்பெனி கேஷியர் போஸ்ட்டுக்கு!''

–அ. இராமதாஸ்

அவன் தன்னைத் தானே தேற்றிக் கொள்கிறன்.

நீள்சங்கு ஒலிக்கிறது. அவன் திடுக்கிடுகிறன். முதலாளி காத்திருப்பாரே! பலீரென்று அவன் காலையில் கடை வீதிக்கு வந்த காரணம் நினைவுக்கு வருகிறது. தோப்பின் மேல் மூலையில் உள்ள மண்டபத்தில் தொடர் சீட்டாட்டம். இவனுடைய முதலாளியும் ஆடுகிறர். அவருக்குப் பிடித்தமான வாசனைப் புகையிலையை வாங்கத்தான் அவன் கடை வீதிக்கு வந்தான். பையில் கையை விட்டுப் பார்த்தான். காலி. அதுதான் பத்திரிகையாக மாறிவிட்டதே! இப்போது அந்த ஏடு சுமையாகக் கனத்தது. அதை யாரும் இப்போது கால் விலைக்குக் கூட வாங்க மாட்டார்களே! புகையிலை இல்லாமல் மண்டபத்துக்குத் திரும்புவது எப்படி? பதறியவாறு கடை வீதிக்கு மீண்டும் ஓடினன். வீரண்ணனையே கேட்டால் என்ன? மணி ஒன்பது. அவருடைய காலை வாணிபம் முடிந்து கடையைக் கட்டியிருப்பார். விறுவிறென்று நடந்து ஆள்கொண்டார் சன்னதிக்கு நடந்தான். வரிசையாகக் குங்கிலியக் கடைகள்.

''பத்துப் பைசாவுக்குக் குங்கிலியம் கொடுங்க!''

கடைக்காரர் ஒரு சிறு பொட்டலத்தை அவன் முன் நகர்த்தினர். அவன் தன் கையிலிருந்த பத்திரிகையை அவர் முன்பு நீட்டினன். அவர் புரிந்து கொண்டு அவன் முகத்தைப் பார்த்தார். 'போ' என்று சைகை காட்டினர்.

பத்திரிகைக் காகிதக் கிழிசலைத் தீக்குழியில் உதிர்த்துக் கரிப் பொட்டை நெற்றியிலிடப் போனபோது அவனுருவம் எதிர்ப்பட்டது. கோயிலிலிருந்து திரும்பி வந்து கொண்டிருந்தாள். உடலோடு ஒட்டிய பட்டுச் சேலை. கழுத்தில் பதக்கத்துடன் கூடிய அட்டிகை. மோதிரச் சுருளாக இருந்த சரத் தலையை அள்ளி முடித்திருந்தாள். பெரிய குங்குமப் பொட்டு. அவள் கோயில் முகப்பை அணுகியதும் எதிரேயிருந்து கார் ஒன்று வழுக்கிக் கொண்டு நகர்ந்து வந்தது. வீதியோரப் பிச்சைக்காரர்கள் ஒரே குரலாகக் கூவினர்கள். ''அம்மா... தாயே!''

தனது தோளில் தொங்கிய பையிலிருந்து சில்லறையை எடுத்து ஒவ்வொருவருக்காகப் போட்டு வந்தாள் மஞ்சுளா. அவன் கண்ணை மூடிக்கொண்டு ஒதுங்கி நின்றன். பதினைந்துக்கும் மேற்பட்ட 'டொக் டொக்' ஒலி. ஒன்னரை ரூபாய்க்கும் மேல். அவன் உதட்டை நாவினல் ஈரமாக்கிக் கொண்டான். முதலாளிக்குப் புகையிலை இல்லாமல் தோப்புக்கு எப்படித் திரும்புவது?

கல்லணை செல்லும் பேருந்து கரப் பிசகாகக் குழலை ஒலித்தது. அண்மையில் சேலையின் சலசலப்பு. ரோஜா தவனத்தின் நறுமணம். மெள்ளக் கண்ணைத் திறந்து பார்த்தான்.

மஞ்சுளா அவனை ஏறிட்டு நோக்கினள். கண்களில் ஒளி மின்னல். ''நீங்களா?'' என்று அவை மௌன பாஷையில் வினவின. உதடுகள் துடித்தன.

அருகில் பணிமகள் சுமந்துவந்த அர்ச்சனைத் தட்டைத் தன் கையில் வாங்கிக்கொண்டாள். தன் கைப் பையைத் திறந்து ஒரு முழுப் பச்சை நோட்டை எடுத்து மலர்க் குவியலின் அடியில் வைத்து அவனிடம் நீட்டினள்.

அவன் பதறினன். வாயிலிருந்து சொற்கள் வெளிவரத் துடித்தன. அவன் நன்றி கூறுவதற்குள் கார் சந்தடியின்றிநகர்ந்துவிட்டது.

மூங்கில் தட்டிலிருந்த ரூபாய்த் தாளைச் சிக்கெனப் பிடித்துக் கொண்டான். மீதியைச் சுற்றி நின்ற பிச்சைக்காரர்களிடம் தாலத்தோடு உதறிவிட்டு முச்சந்தியை நோக்கி ஓடினன் முதலாளிக்குப் புகையிலை வாங்க!

# பியூனாகவாவது போகவேணு?



பெயர்: சுகி சந்திரன் (சு. கிருஷ்ண சந்திரன்)

கல்வி : பி. காம் (இளங்கலை வணிகவியல்)

வயது, பிறந்த தேதி: 23, (6-6-1958)

முகவரி: 1/6, பூபாலராயர் 1ம் தெரு
தூத்துக்குடி-628001

தற்போது ஆற்றும் பணிகள் : நண்பர்களுடன் சேர்ந்து மக்கள் பொதுப்பணி இயக்கம் ஆரம்பித்துச் சேவை செய்கிறேன்.

அகல்விளக்கு என்னும் கையெழுத்துப் பத்திரிகையின் துணை ஆசிரியராக உள்ளேன்.

எதிர்பார்ப்பு : மன அமைதிக்காக 400 ரூபாய் சம்பளத்தில் ஒரு வேலை

எதிர்காலத் திட்டம்: இன்னும் ஓராண்டுக்குள் வேலை கிடைக்காவிட்டால் ஏதாவது வியாபாரத்தில் ஈடுபட வேண்டும். பொதுப் பணியில் முழு மூச்சாக ஈடுபட வேண்டும்.

நான் வணிகவியல் துறையைச் சார்ந்தவன். கல்லூரியில் என்னைச் சேர்த்த என் பெற்றோர் பையன் படித்து முடித்தவுடன் 'பேங்க்' மேனேஜராகி விடுவான். சுபிட்சம் வீட்டில் நிரம்பி வழியும் என்றெல்லாம் கனவு கண்டார்கள். பட்டம் பெற்று வெற்றிகரமான 3ம் ஆண்டு நடந்து கொண்டிருக்கிறது.

''தம்பி இன்னும் வேலை கிடைக்கலியா? என்ன படிச்சிருக்கீங்க?''

'பி. காம் படிச்சிருக்கேங்க.''

''பேங்க்லே வேலை கிடைக்குமே. நீங்க முயற்சி பண்ணலியா?''

இப்படி ஆயிரம் பேர்களின் அனுவசியமான பேச்சால் என்போன்ற எண்ணற்ற இளம் உள்ளங்களில் சலிப்பு ஏற்பட்டதே தவிர வாழ்வில் முன்னேறுவோம் என்னும் திடமான நம்பிக்கையே பிறக்கவில்லை.

கல்லூரியில் படிக்கும் காலத்தில் பொருளாதாரப் பேராசிரியர் வருவார். 'பி. காம் படிக்கிறீங்க. நீங்கல்லாம் ஒரு காலத்தில் ரிசர்வ் பாங்க் கவர்னராகக் கூட வரலாம்' என்பார். அது அப்போது மனத்துக்கு மகிழ்ச்சியாக இருந்தது. இப்போது நினைப்பது உண்டு 'ரிசர்வ் பேங்க் பியூனாகவாவது போக முடியலியே' என்று.

கம்பெனி அமைப்பியல், வியாபார, தொழில் சட்டங்கள், தணிக்கை ஆகிய பாடங்களைப் படித்து முடித்துவிட்டு இப்போது தவிக்கிறேன்.

இத்தனை பாடங்களையும் படிக்காமல் ஏதோ ஓர் எஸ். எஸ். எல். சி. மட்டும் படித்திருந்தால் நான் வண்டி இழுத்தாவது வாழ்க்கை வண்டியை ஓட்ட முடியும். இன்று அதுவும் செய்ய முடியவில்லை. காரணம் பி.காம் என்னும் பிரிஸ்டிஜ் போய்விடும் என்று பயம்.

இறுதியாக ஒன்றே ஒன்று மட்டும் எனக்குப் படுகிறது. எந்தத் துறையைப் படித்தாலும், 'படிப்புக்கு மதிப்பில்லை' என்பது தான்.

— சுகி. சந்திரன்

---

**பாப்பா!**

இரவில் குறைந்த கட்டணம் என்பதால் சென்னையிலிருக்கும் என் தங்கைக்கு ஒரு டிரங்கால் புக் பண்ணிவிட்டுக் காத்திருந்தேன். நேரம் நடு நிசியை நெருங்கிக் கொண்டிருந்தது. கால் கிடைக்கவில்லை. காயல்பட்டினம் எக்ஸ்சேஞ்சுக்கு டயல் பண்ணிக் கேட்டேன்.

''ஸார்! நம்பர்லே பெரியாட்கள் இல்லே. எப்பட்ரை பண்ணினாலும் பாப்பாதான் எடுத்துப் பேசுது! என்ன பண்றது?'' என்று ஆபரேட்டர் கேட்டார்.

''ஸார்! அது பாப்பா இல்லே; பெரிய ஆளு தான்! கனெக்ஷன் தாங்க'' என்றேன்.

கனெக்ஷன் கிடைத்ததும் ''ஹலோ!'' என்று நான் குரல் கொடுக்கவும் ''நான் பாப்பா பேசறேன்'' என்று என்னுடைய 32 வயது தங்கையின் குரல் கேட்டது!

-கரால் பாகோ



# சாதாரண மனிதன்

## 'லக்ஷ்மி'

**20**

ஒரே கணத்தில் மின்னல் வேகத்தில் எண்ணங்கள் சில அவள் மூளையில் பளிச்சிட்டன.

அத்தை ஜகதாவுக்கு இரத்த அழுத்த நோய். ஏற்கெனவே பல துன்ப அனுபவங்களில் அடிபட்டு நொறுங்கி விட்டிருப்பவள். அன்று நடந்த சங்கதியைச் சொல்லி அவளுக்கு அதிர்ச்சி தருவதா? குமரேசன் அத்தானின் சூழ்ச்சியாக இருந்தால் — அவரைச் சூழ்ச்சியாலேயே முறியடிக்க வேண்டும்.

வீணாக அவள் மனத்தைப் புண்படுத்தி விட்டிருக்கும் தலைவிக்கு சந்தியா லேசுப்பட்டவள் இல்லை என்பதை உணரச் செய்ய வேண்டும். கோழையாகப் பயந்து கொண்டு வேலையை ராஜிநாமாச் செய்து விடக்கூடாது.

ஆத்திரத்தில் புரண்டு எழுந்த எண்ணங்கள் அவளை உலுக்கவே அத்தை ஜகதா மென்மையாக அவள் தோளைத் தொட்டு முகத்தை நிமிர்த்திக் கண்களில் வழிந்த கண்ணீரைத் தன் முந்தானையால் துடைத்துவிட்டு 'என்னம்மா?... என்கிட்டச் சொல்லு. என்ன நடந்தது...' என்று அன்பாக விசாரித்தபோது அவள் சட்டென்று அழுகையை நிறுத்திக் கொண்டாள்.

''உங்களுக்கு என்னைப் பத்தி நல்லாவே தெரியும். பொறுப்புக்களைத் தாங்க முடியலேன்னு ஒரு மூச்சு அழுது தொலைப்பேன்.''

''அழுதுட்டா பொறுப்புக்கள் நம்மை விட்டு ஓடிவிடுமா சந்தியா?'' முறுவலித்தபடி அத்தை அவள் முதுகைத் தடவினாள். கலைந்து புரண்டு நெற்றி மீது பரவிக் கிடந்த முடியை ஒதுக்கிவிட்டாள். ''கொஞ்சம் சூடாகக்காப்பி தரேன். சாப்பிட்டுட்டுக்குளிச்சுட்டு வாம்மா. பகல் வேளை நீ சரியாச் சாப்பிட்டிருக்க மாட்டே. உனக்குப் பிடிக்காத மைதா மாவு தோசையை டிபன் கட்டிக் கொடுத்தப்பவே நினைச்சேன்...'' என்றாள்.

உண்மையும் அதுவே. தலைவியிடம் பேசிவிட்டு வந்த பின்னர் அன்று பகல் அவள் சாப்பிடவில்லை. பள்ளிக்கூடப் பியூனிடம் தோசைப் பொட்டலத்தை டப்பாவினின்று எடுத்துக் கொடுத்துச் சாப்பிடச் சொல்லி உபசரித்து விட்டிருந்தாள்.

இத்தனை பழிச் சொற்களை ஏற்று வாழ்க்கையில் தன்னந் தனியே எல்லாவற்றுக்கும் எதிர் நீச்சல் போட வேண்டியிருக்கிறதே என்று அவளுக்குத் தன்மீதே பெரும் கசப்பு. அதற்குத் தண்டனை போல் பகல் உணவை ஒதுக்கிவிட்டுப் பட்டினியாகஇருந்து விட்டாள். அன்று மாலைப் பொழுது பஸ் பிடிக்க வேகமாக நடந்தபோது ஒரு கல் இடறிக் கட்டை விரல் நகமே பெயர்ந்து கொண்டு அந்த வலியில் துடித்துப் போனாள். அந்த வேதனை வேறு.

''பசிக்கலே. அதனாலே பகல் டிபன் சாப்பிடலே. ஆனால் நீங்க அன்பாக் கட்டிக் கொடுத்ததை நான் தூக்கி எறிஞ்சுடலே. பள்ளிக்கூடத்துப் பியூனுக்குச் சாப்பிடக் கொடுத்துட்டேன்....''

''பாவம் பிள்ளை குட்டிக்காரன். சாப்பிட்டுட்டுப்போகட்டும். நீ எழுந்திரு.சீக்கிரம் குளிச்சுட்டு வா....'' அத்தை உசுப்பினாள்.

''இன்னிக்குப் பள்ளிக்கூடத்தில் ரொம்ப வேலை. உசிரே பாதி போயிட்டது. தலைவிக்கு எத்தனை நல்லா வேலை செய்தாலும் திருப்தியே கிடையாது.''

''சிலபேர் அப்படித்தான். உன் அக்கா சூர்யாவை எடுத்துக்கோ. நாம் இங்கிருந்து எத்தனை சாமான் கட்டிக் கொடுத்து அனுப்பறோம். எப்பவாவது ஒரு நல்ல வார்த்தை சொல்லியிருப்பாளா? இனாமாக் கிடைச்ச பொருள் என்ற மதிப்புக் கூடக் கிடையாது. ஆயிரம் குறைகள். கத்தரிக்காய் ஒரே சொத்தை — வெண்டைக்காய் ஒரே முற்றல். தக்காளி ஒரே அழுகல்... இப்படிக் கொஞ்சம் கூடத் திருப்தி இல்லாமல் தொண தொணப்பாள். உன் பள்ளிக்கூடத்துத் தலைவி உன் அக்காவைப் போல ஒரு திருப்தி இல்லாத பிறவி போல் இருக்கு. இவர்களை யெல்லாம் நாம் திருத்தவே முடியாது. உன் பாட்லே உன் வேலைகளைச் செய்துக்கிட்டுப் போ. யார் பேச்சையும் காதில் போட்டுக்காதே... எழுந்திரும்மா... காப்பி கொண்டு வரேன்....'' உள்ளே சென்றாள்.

காப்பியுடன் அத்தை ஜகதா திரும்பிய போது சந்தியா முற்றத்துக் குறட்டில் உட்கார்ந்தபடி வலது கால் கட்டை விரல் மீது பஞ்சை மருந்தில் தொட்டுத் தடவிக் கொண்டிருப்பதைக் கண்டாள்.

''என்ன ஆச்சு... கட்டை விரலில் காயம் பட்டிருக்கே — இது எப்போ ஏற்பட்டது? இந் நேரம் வரை இதைப்பற்றி என்கிட்டே எதுவுமே சொல்லலையே...'' பதற்றமாகக் கேட்டபடி காப்பி டம்ளரை அருகில் வைத்துவிட்டுத் தூண் ஓரம் வந்து உட்கார்ந்துவிட்டாள் அத்தை ஜகதா.

''வழியிலே ஒரு சிறு கல் இடறிக் கால் நகம் சித்த பெயர்ந்துக்கிட்டு... லேசா ரத்தம் வந்துட்டது.''

''விண் விண்ணென்று வலிக்கத் தொலைச்சிருக்குமே...'' அனுதாபத்துடன் அருகே நெருங்கிக் காலை மெல்லத் தொட்டுப் பார்த்தாள் ஜகதா.

''ஏம்மா பார்த்து நடக்கக் கூடாதா? அப்படி என்ன அவசரம்? ஒரு பஸ் போனா அடுத்ததைப் பிடிச்சு வீட்டுக்கு வரது. வீட்டைக் கவனிச்சுக்க நான் ஒருத்தி இருக்கும்போது என் உனக்கு விசாரம்?'' பரிவுடன்கேட்டாள்.

''இதேமாதிரி முன்னொரு தடவை, காலில் கல் இடறிக் காயம்பட்டுதே நினைவிருக்கா அத்தை...?'' கேட்டுவிட்டு மருந்துப் புட்டியை மூடிவிட்டுப் புன்முறுவலித்தாள் சந்தியா.

அத்தை ஜகதாவுக்கு அந்த நிகழ்ச்சி நன்றாகவே நினைவிலிருந்தது. அவள் அண்ணன் இறந்த பின் நடந்த அந்தக் காரியங்களுக்காக நெருங்கிய உறவினர்கள் குடும்பத்துடன் வந்து கூடிவிட்டிருந்தனர். வீடு கொள்ளாத கூட்டத்தையும் செலவையும் சமாளிக்க முடியாமல் தவித்த சந்தியா பொறுமை குறைந்தவளாக அத்தையைத் தன் விழிகளால் பன்முறை சுட்டாள். காரியங்களுக்காக வந்திருந்தவர்களின் குழந்தைகளில் சில வால் பிள்ளைகள். தோட்டத்துக்குள் புகுந்து மாம்பிஞ்சுகளையும் மாதுளம் பிஞ்சுகளையும் வேட்டையாடத் தொடங்கி விட்டனர். செடி கொடிகளை மிதித்துக் கொண்டு கூச்சல் போட்டுக் கொம்மாளமடித்த அந்தக் குழந்தைகளை அடக்கக் கோபத்துடன் சந்தியா தோட்டத்துக்கு அவசரமாக ஓடியபோது... கிணற்று மேடை அருகே ஒரு கல் தடுக்கிக் கட்டை விரலில் காயம் செய்து கொண்டிருந்தாள். கால் விரலைப் பிடித்து அமுக்கிக் கொண்டு வலி தாளாது வேதனையுடன் உட்கார்ந்திருந்தவளைப்பார்த்துக் குமரேசன் அத்தான் என்ன சொன்னார்?

அந்த நினைவு வந்ததும் அவளுக்குக் கோபம் கலந்த ஒரு சிரிப்பு வந்து விட்டது.

குமரேசனை நினைத்துக் கோபப்படுவதில் அர்த்தமில்லை. சிரிக்கத்தான் வயிற்றெரிச்சலைத் தீர்த்துக்கணும் – அவன் அப்படி ஒரு பிறவி.

வலியாலே ஒரு பொண்ணு துடிச்சிட்டிருக்காளேன்னு இரக்கம் இல்லாமல் அவன் அன்னிக்குக் கிண்டலாப் பேசினது நல்லாவே நினைவில் இருக்கு. உன்னைப் போல அவசரக்காரிகளுக்குக் கடவுள் காலில் கண் வச்சிருக்கணும்... அப்படின்னுட்டு கைகொட்டிச் சிரிச்சான் ராட்சசன்.. அதை ஏன் இப்ப நினைப்புக் கூட்டறே? நான் கொஞ்சம் மருந்து தடவி விடவா?... துளி சுண்ணாம்பை எடுத்து நகக் கண் மேலே வச்சா...' சீக்கிரம் காயம் ஆறிடும்... அடடா... உன்கிட்ட நான் வைத்தியம் சொல்லிச் சாத்தியப்படுமா... ஒரு வைத்தியனையே உன் உள்ளங்கைப்பிடியிலே...'' அத்தை சொல்லி முடிக்கு முன் சந்தியா... ''அத்தை... போதும்...'' செல்லமாகச் சிணுங்கிக் கொண்டு காப்பி டம்ளரைக் கையில் எடுத்தாள். ஒரே வாயாக அதைக்குடித்து முடித்து விட்டுக் குளியலறைக்கு ஓடிவிட்டாள்.

இரவு உணவுக்குப் பின் பாயைக்கூடத்துத் தரை மீது விரித்துப் போட்டு தலையணைகளைக் கொண்டு வைத்தாள் சந்தியா. வெற்றிலையை மென்றபடி தன் கூந்தலை அவிழ்த்துத்தட்டி முடிந்துகொண்டு அத்தை அதன் மீது மெல்ல அமர்ந்து கொண்டாள். நாள் முழுவதும் செய்த வேலையின்அலுப்பு...எப்போ தலையை சாய்ப்போம் என்றிருந்தது அவளுக்கு. வாயிற்புறமும் பின் பக்கமும் சாத்தியிருந்த கதவுகளின் தாழ்ப்பாள் சரியாகப் போடப்பட்டுள்ளனவா என்று சோதித்துவிட்டு ஸாம்சனுக்குப் பேஸினில் தண்ணீரை வைத்துவிட்டு, கீழ் தாழ்வாரத்து ஜன்னல் ஓரமாகக் கட்டியிருந்த கன்றுக்குட்டியைத் தடவிக் கொடுத்துக் கொஞ்சிவிட்டு, குழல் விளக்கை அணைத்துவிட்டு விடிவிளக்கை ஏற்றிய பின் நிதானமாக அத்தை அருகே வந்து பாயின் மீது உட்கார்ந்து கொண்டாள்.

''பகல் டிபன் உனக்குப் பிடிக்காதது... சாப்பிடத் தோணலே போகட்டும். இப்போ ராத்திரிக்கு உனக்குப் பிடிச்சதைத்தானே சமைச்சிருந்தேன். தட்டிலே போட்டதைக் கொறிச்சே... ஏன் நல்லாவே சாப்பிடலே...'' அத்தை அன்போடு அதட்டினாள்.

''பசிக்கலே அத்தை....'' முணுமுணுத்தாள் சந்தியா.



"வயசுப் பொண்ணு — வேலை செய்திட்டு வரே... பசிக்கலைன்னு உடம்புக்கு ஏதாச்சும் கோளாறு ஏற்பட்டிருக்கணும்..."

"உடம்புக்கு ஒரு கேடும் இல்லை அத்தை."

"புரியிறது.... உன் மனத்திலேதான் ஒரு குழப்பம்... ஒரு கோபம்... சந்தியா! எனக்கு நீ காது குத்த வேண்டாம். உன்னைச் சின்னப் பிள்ளையிலிருந்து மடியிலே போட்டுக்கிட்டுத் தாய் போல வளர்த்தவ நான். உன் மனம் எதுக்கு எப்படியெல்லாம் குழம்பும் — உனக்கு எதற்கெல்லாம் கோபம் வரும்... எதெல்லாம் உனக்குப் பிடிக்காதுன்னு உன்னைப் பத்தி சகலமும் அணு அணுவாகப் புரிஞ்சு வச்சுக் கொண்டிருக்கிறவ நான். சரியான பைத்தியக்காரப் பொண்ணு நீ... டாக்டர் கிரிதரன் எழுதின கடிதத்தில் உன்னைத் தனிப்பட விசாரித்து எழுதலைன்னுதானே உனக்கு இந்த மனத்தாங்கல் துக்கம், எரிச்சல் எல்லாம்?...."

"போங்க அத்தை...." — சிணுங்கியபடி செல்லமாகத் தன் தலையை அத்தையின் தொடை மீது சாய்த்துக் கொண்டு படுத்து விட்டாள் சந்தியா. அவள் நெஞ்சம் உணர்ச்சி வசத்தில் படபடத்தது.

## தேடல்கள்...

மன இரைச்சல்களுக்கு ஆறுதலாய்
மயிலிறகு தேடுகின்றேன்—
சுற்றுப்புறக் கண்களில்.
யாரிடமாவது கூசாமல்
சூரியனை உற்றுப்பார்க்கிற
விழிகள் இருக்கிறதா....?
ஏனென்றால் நான் சூரியன்,
எரிக்கிறதில் இல்லை.
மனசின் எரிச்சல்களில்.
குளிர்ச்சியான அந்த விழிகளால்தான்
என் வெம்மை
தகர்க்கப்பட வேண்டும்.
அந்த விழிகள்தான்
இறுக மூடியிருக்கும் என்
மன குகை திறக்க உதவும்
அலிபாபா மந்திரம்.
என் தேகத்தின் திசுக்களும்
அத்தனை வார்த்தைகளும், சுவாசமும்
அந்த விழிக்காகவேதான்.
மன வீணை வாசிக்கப்பட
காத்திருக்கிறது.

-சாருப்ரபா சுந்தர்



"உன் மாமன் — அதான் என் கணவர் இருந்தாரே அவர் கூட இப்படித்தான் ஊர் வழிக்குப் போனா உடனடியா கடிதாசி போட்டுடுவார். ஆனால் கிழக்கே நின்னேன் மேற்கே பார்த்தேன் அப்படின்னு உப்புச்சப்பில்லாத விஷயங்களை எழுதிக் குவிச்சிருப்பார். ஒரு வார்த்தை ஜகதா! நீ எப்படி இருக்கே... உன்னைப் பிரிஞ்சு இவ்வளவு தூரம் வந்திருக்கிறது ரொம்பக் கஷ்டமா இருக்குன்னு ஏதாச்சும் மனசுக்கு இதமா எழுதுவாரா... ஊஹூம்... எழுதத் தெரியாது. அதனாலே அவருக்கு என் பேரிலே அன்பில்லைன்னு அர்த்தமில்லே. சில ஆண்பிள்ளைகளுக்கு மனத்தில் இருக்கிறதை வார்த்தைகளால் கொட்டி எழுதத் தெரியாது... செய்கையில் தான் அன்பைக் காட்டத் தெரியும்..."

"இப்ப என்ன சொல்ல இப்படிச் சுத்தி வளைக்கிறீங்க அத்தை?"

"உண்மையைச் சொல்ல... பாவம் அந்தப் பிள்ளை ஏதோ முக்கிய காரியமா பம்பாய் போயிருக்கான். தான் ஊரில் இல்லை என்பதை கர்ம சிரத்தையாக உனக்குச் கடிதம் எழுதித் தெரிவிப்பானேன்? உன் மேலே கொள்ளை ஆசை இல்லாட்டா எதுக்காக அவன் தெரிவிக்கணும்? கடிதத்திலே மனத்தில் இருப்பதை அப்பட்டமா எழுதக் கூச்சம். அவனுக்கு உன்னைப் பிடிக்காட்டி இந்த வீட்டுக்கு ஏன் அடிக்கடி ஏதாவது சாக்குச் சொல்லிக்கிட்டு வரணும்? உன்னைக் காரில் ஏத்திக்கிட்டுப் பத்திரமா வீட்டிலே கொண்டுவந்து சேர்க்கணும்னு அவனுக்கு என்ன தலையெழுத்து?"

"ஒரு சமயம் உங்களைப் பார்க்க வந்திருக்கலாம்."

"ஆமாம், இன்னும் பத்து வயசு கழிச்ச இந்தக் கிழ அத்தையை அவன் பார்க்க வந்ததாகக் கூடச் சொல்லுவே நீ.. நீ ரொம்ப இடக்குப் பிடிச்சவ... அதனால்தான் குமரேச அத்தான் உன்னைக் கரிச்சுக் கொட்டறான். உனக்கு நல்லாத் தெரியும். உன் நெஞ்சைத் தொட்டுப் பார்த்துட்டுப் பேசு. கிரிதரன் நான் செய்கிற குழாப் புட்டு சாப்பிடவா இங்கே வந்துட்டுப் போயிட்டு இருக்கான்?" செல்லமாக அவளது கன்னத்தை மெல்லக் கிள்ளினாள் ஜகதா.

"போங்க அத்தை..." சிணுங்கியபடி அவளது மடியில் தலையை அழுத்திக் கொண்டு கரங்களால் இடுப்பைச் சுற்றி அணைத்துக் கொண்டாள்.

"நான் ஏன் போறேன்... உங்கள் கல்யாணம் முடிஞ்சு என் அண்ணன் பேரனையோ பேத்தியையோ மடியிலேவச்சிக்கிட்டுச்கொஞ்சறவரை... உன்னை விட்டு எங்கேயும் போக மாட்டேன். விடு... எழுந்து சித்த விசிறியைப் போடு.. படுக்க விடுடி மகராஜி.:. தூக்கம் கண்ணைச் சுழற்றுது...." என்று மெல்ல அணைப்பிலிருந்து தன்னை விடுவித்துக்கொண்டு சிரித்தபடி ஜகதா தலையணை மீது சாய்ந்தாள். மின் விசிறியைச் சுழல விட்டுத்தானும் அவளருகே சற்று ஒதுங்கிப்படுத்துக்கொண்டாள். அவளது நினைவும் கற்பனைகளும் கிரிதரனைச் சுற்றிச் சுழலத் தொடங்கின. (தொடரும்)

# எச்சரிக்கை - இன்னும் சில!

சனிக்கிழமை 8—5—82ல் நான் ராமேஸ்வரம் எக்ஸ்பிரசில் சென்னையிலிருந்து கும்பகோணத்துக்குப் பயணமானேன். எனது பெட்டி எஞ்சினை அடுத்து. 'ஏ' பெட்டியில் நெ. 22ல் அமர்ந்திருந்தேன். ரயில் தாம்பரத்தைத் தாண்டிக் கொண்டிருந்த சமயம். திடீர் என ஒரு கருங்கல் வெகு வேகமாக வந்து சன்னல் வழியாக என்னைத் தாக்கியது. மூக்கில் அடிபட்டு விட்டதால் ரத்தம் மேல் புறமாகவும், உள்புறமாகவும் கொட்டத் தொடங்கியது. உடனே அருகில் இருந்தவர்கள் ஓடிவந்து ரத்தம் நிறுத்த வேண்டிய சிகிச்சையைச் செய்ய முயற்சிகளை மேற்கொண்டனர்.

சிலர் ஓடிச் சென்று பெட்டியில் இருக்கும் டி. டி. ஆரிடம் சென்று விஷயத்தை விளக்கினர். அவர் செங்கல்பட்டு வரட்டும் பார்க்கலாம் என்றார். செங்கல்பட்டு வந்தும் ஒரு முயற்சியும் மேற்கொள்ளவில்லை. அப்போது பெட்டியில் சிலர் சொன்னார்கள்—

இந்த வண்டியை இப்படிக் கல்லெறிந்து தாக்குவது இது முதல் நிகழ்ச்சி அல்லவாம். இது மாதிரிப் பல தடவை நடந்துள்ளது என்றும், அந்தக் குறியானது என்ஜின் டிரைவரை நோக்கி வைக்கப்பட்டது எனவும் அப்படி டிரைவர் அடிபட்டால் வண்டியை நிறுத்துவார்; அப்போது சில ரௌடிகள் வண்டியில் ஏறிக் கத்தியைக் காட்டிப் பொருட்களைப் பறித்துச் செல்லவும் திட்டம் என்று கூறினர். இதைக் கேட்டதும் என் வலியில் பாதி குறைந்து விட்டது. டிரைவரைத் தாக்க வேண்டிய கல் குறி தவறி என்னை மட்டும் தாக்கியதால் நான் ஒருவன் மட்டுமே துன்பத்துக்கு ஆளானேன். ஆனால் டிரைவர் தாக்கப்பட்டு வண்டி நின்று போயிருக்குமானால் கள்வர்களின் வழிப்பறி! எத்தனை பேரின் அழுகுரலைக் கேட்க வேண்டியிருந்திருக்கும்! நிலைமை இந்த அளவுக்குப் போயும் ரயில்வே நிர்வாகம் இதற்கு ஆவன செய்யாமல் இருப்பது ஏனோ?

—எம். பாண்டுரங்கன்

● 'எச்சரிக்கை' பகுதியில் நீங்கள் தந்த விவரங்கள் மிகப் பயனுள்ளவை. இன்னொன்று—

'பாரி முனையில்' பழ மார்க்கெட்டின் வெளிப்புறம் நடை பாதையில் ஆப்பிள் பழங்களை விற்கிறார்கள். விலை குறைவாக இருக்கும். பழம் பெரிதாக இருக்கும். காகிதத்தில் கட்டித் தருவார் கடைக்காரர். வீட்டுக்குப் போய்ப் பிரித்துப் பார்த்தால் உள்ளே சின்ன மட்டமான பழங்கள் இருக்கும். எப்படி நடக்கிறது இது? சாய்வாக ஒரு பலகை இருக்கும். அதன் மறைவில் ஏற்கனவே அரை டஜன் அரை டஜனைப் பழங்கள்—மட்டமானவை—கட்டி வைக்கப்பட்டிருக்கும். நீங்கள் பொறுக்கிக் கொடுத்த பழங்களைக் கட்டிய பார்சலைக் கீழே நைஸாகப் போட்டுவிட்டு ஏற்கனவே கட்டி வைத்துள்ள பார்சலை மிகச் சாமர்த்தியமாகக் கடைக்காரர் எடுத்துத் தருவார். பொட்டலம் கட்டாமல் 'பையில் போடு' என்று நீட்டினால் அந்த விலைக்குத் தரமாட்டார். ஏமாந்தவர்கள் ஏராளம்.

-இரா. கணபதி

● மெரினா கடற்கரையில் ஐஸ் வியாபாரிகளிடம் குச்சி ஐஸ் என்ன விலை என்றால் 25 பைசா என்பார்கள். உடனே 'ஐஸ்' மேல் உள்ள காகிதத்தைக்கிடுகிடுவென்று பிரித்துச் சாப்பிடும் பக்குவத்தில் அழகாகத் தருவார்கள். நாம் உடனே வாங்கி அதை ஒரு முறை சப்பிவிட்டு, காசைக் கொடுத்தால் 'என்ன 25 பைசா தர்றீங்க, எழுபத்தி ஐந்து பைசா என்று சொன்னதை இருபத்தி ஐந்து பைசா என நினைத்துக் கொண்டீர்களா?' என்று சிரிப்பார்கள். இதே போல்தான் இரண்டரை ரூபாய் 'கப் ஐஸ்'ஐ அரை ரூபாய் என்று ஏமாறுமாறு உச்சரிப்பார்கள்.

—கை. இராமமதி




OOB
BLUE
BEST ULTRAMARNE
ULTRAMARINE & PIGMENTS LTD



✱ டாக்டர் சாரதா மேனன்



✱ வி. ஆர். துரை



✱ ராமசந்திர ஆதித்தன்

# குற்றவாளிகளைப் பிரபலப்படுத்துவது குற்றமா?

**கொலைகாரர்கள், கொள்ளைக் காரர்கள் ரௌடிகள் ஆகியோரைப் பற்றி பத்தி பத்தியாக பத்திரிகைகள் செய்திகளை வெளியிடுகின்றன. இவை குற்றங்களை அதிகப் படுத்த வழி வகுக்குமா?**

**ராயப்பேட்டையைச் சேர்ந்த ரிக்ஷா தொழிலாளர் திரு சாமிக்கண்ணு:**

"பேப்பர்ல கொலைகாரன், ரௌடிகளைப் பத்திப் போடறது தப்பில்லை சார். மக்களுக்கு அந்த விஷயங்களைப் பற்றிப் படிப்பதில் அக்கறை இருக்கிறது. 'இவ்வளவு பேரைக் கொலை பண்ணினான், எப்படிப் பண்ணினான் என்றுதான் போடுகிறார்களே தவிர அவன் செய்தது நியாயம் என்று போடுவதில்லையே. நான் தினமும் பேப்பர்களைப் படிக்கிறவன் தான். இந்த மாதிரி விஷயங்களைப் படிக்கும்போது, 'இந்தக் கொலைகாரப் பாவிங்களை நடு ரோட்டில கட்டுத் தள்ளினா என்ன'ன்னுதான் மனசுக்குள்ளே நினைச்சுக்கிறேன். குற்றவாளிகளை பத்திப் படிச்சுட்டு குற்றவாளிகளா மாறணும்கிற மனநிலை லட்சத்துலே ஒருத்தருக்குத்தான் வரும். எனக்கெல்லாம் படிச்சதோடு சரி. மற்றபடி இன்னிக்கு நிறையச் சவாரி கிடைக்குமான்ற கவலைதான்.

**மயிலாப்பூரைச்சேர்ந்த நடுத்தர குடும்பத்துக்காரர் திரு வி. ஆர். துரை:**

தமிழ் பத்திரிகைகள் இந்த விஷயங்களைப் போடும் அளவுக்கு ஆங்கிலப் பத்திரிகைகள் போடுவதில்லை. இந்த மாதிரியான விஷயங்களைப் படிப்பதில் மக்களுக்கு ஆர்வம் இருப்பதைப் பத்திரிகை அதிபர்கள் புரிந்து வைத்துக்கொண்டு இருக்கிறார்கள். அவர்கள் செய்வது வியாபாரம். மேலும் பத்திரிகைகள் இந்த விஷயங்களைப் போடாமலிருந்தால்

"குதிரை ரேசிலே கடைசியா ஓடிவர்ற குதிரைக்குப் பின்னடி ஒருத்தர் என்னமோ சொல்லிட்டு ஓடிவர்றாரே என்னவாம்?"

சம்பள பணம் பூராவும் இந்தக் குதிரை மேலே கட்டித் தொலைச்சு இருக்கேன் வேகமா ஓட்டித் தொலைடா பாவி'ன்னு ஜாக்கியைப் பார்த்துக் கத்திக்கிட்டே ஓடி வர்றாரு."

-ச. கமலதியாகராஜன்



மக்களுக்குக் கொலைகாரன் யார், ரௌடி யார் என்று தெரியாமல் போய்விடும். படித்து தெரிந்து கொண்டார்களானால், அந்த மாதிரியான நபர்களை அடையாளம் கண்டு கொண்டு போலீசுக்கு உதவ வாய்ப்பு உண்டு. ஒரு கொலைகாரனையோ அல்லது கொள்ளைக்



✕ சாமிக்கண்ணு

காரனையோ பார்ப்பதற்கு மக்களுக்கு இருக்கும் ஆர்வம் முட்டாள்தனமானது. இன்னொரு முக்கியமான விஷயம், குற்றவாளிகளைப் பற்றிப் போடக் கூடாது என்றால், பத்திரிகை சுதந்திரத்தில் கைவைப்பது போல் ஆகாதா?

**"மாலை முரசு" அதிபர் திரு ராமச்சந்திர ஆதித்தன்:**

எங்கள் பத்திரிகையைப் பொறுத்த வரை போலீஸ்காரர்கள் கொடுக்கும் செய்தியைத் தான் போடுகிறோமே தவிர, குற்றவாளிகளைப் பேட்டி கண்டு எழுதுவதில்லை. குற்றவாளிகளைக் கதாநாயகர்களாகக் காட்டுவதில்லை. 'குற்றம் செய்தால் தண்டனை உண்டு' என்ற பாணியில்தான் எங்கள் செய்திகள் இருக்கும்..

ஒரு குற்றவாளியைத் தூக்கிலிட கோர்ட்டு தீர்ப்பு வந்ததென்றால், எங்கள் பத்திரிகையில் அதைப் பெரிதாக வெளியிடுகிறோம். அந்தச் 'செய்தியில் 'இன்ன குற்றம் செய்தான், அதனால்தான் தூக்குத் தண்டனை' என்று குறிப்பிடுவோம். இதன் மூலம் மக்களுக்குக் குற்றம் செய்தால் தண்டனை உண்டு என்ற மனப்பான்மையை உண்டு பண்ணுகிறோம். இது ஒரு வகையில் குற்றங்களைக் குறைக்கும் பணி என்று கூட நான் கூறுவேன். பத்திரிகைச் செய்திகளைப் படித்துவிட்டு, அதன் பாதிப்பில், நிறையப் பேர் குற்றம் செய்யத் துணிவார்கள் என்பதெல்லாம் சரியல்ல. குற்றம் செய்தவன், எப்படிச் செய்தான், அவன் எந்தப் பகுதியைச் சேர்ந்தவன், என்று போடுவதெல்லாம் பொதுமக்கள் நன்மையைக் கருதித் தான்.

**மனோதத்துவ நிபுணர் டாக்டர் சாரதா மேனன்:**

குற்றவாளிகளைப் பற்றிய செய்திகளைப் படித்துக் குற்றம் செய்பவர்கள் அதிகமாவார்கள் என்பது தவறு. அது படிப்பவர்களின் மனநிலையைப் பொறுத்தது. நிறையபேர் படிப்பதோடு நிறுத்திக் கொள்வார்கள். எழுத்துக்களின் பாதிப்பை விட சினிமாவின் பாதிப்புத்தான் குற்றங்களை அதிகமாக்குகிறது. பத்திரிகைகளில் நடந்ததைத்தான் எழுதுகிறார்கள். ஆனால் சினிமாக்கள் கற்பனையால் உருவாக்கப்பட்டவை. நடந்த ஒரு நிகழ்ச்சியைப் பற்றிப் போடுவது பத்திரிகைகளின் கடமை. இதனால் மக்கள் பாதிக்கப்படுவார்கள் என்பது தவறு. தேடப்படும் குற்றவாளிகள் பலர் பத்திரிகைகளின் உதவியால் பிடிபட்டு இருக்கிறார்கள். ஆக பாதிக்கப்படுவதும், படாததும், படிப்பவர்களின் மனநிலையைப் பொறுத்தது. ஆனால் குற்றவாளிகளைக் கதாநாயகர்களாகக் காண்பிப் பார்களேயானால் அது தவறு.

படம் : சுபா; ஜெய்மோகன்

பேட்டி : ப்ரியன்

**இதோ ஒரு கிராமம்**

# தேர்தல் காலத்திலும் வராத வேட்பாளர்கள்!



ஊரின் மத்தியில் ஓர் அழகிய பெரிய குளம். தாமரையும் அல்லியும் மலர்ந்து சிரிக்கும். குளத்தைச் சுற்றிலும் தென்னஞ் சோலைகள்.

இவ்வூரில் வாழ்ந்து சமீபத்தில் மறைந்த பெருநிலக்கிழார் திரு கணேச வாண்டையார் சிறு வயதில் சிங்கப்பூர் சென்று 50 வயதுக்கு மேல்தான் ஊர் திரும்பினார். அவர் வந்த பின்னர்தான் இந்தச் சோலைக்குள் மக்களுக்குக் குழாய்த் தண்ணீர் (கையினால் அடிக்கும் குழாய்) கிடைத்தது.

இங்கு சுமார் 25 வீடுகள்தான் இருக்கும். பாதிக் குடும்பங்கள் தாழ்த்தப்பட்ட வகுப்பையும் மற்றவை முக்குலத்தோரில் ஒரு பிரிவையும் சேர்ந்தவை. ஹரிஜனங்களிலும் இரு பிரிவினர் தனித் தனியாக வேறு வேறு இடத்தில் வசித்து வருகின்றனர்.

இந்த ஊரை அடைவதென்பது அவ்வளவு சுலபமன்று. மன்னார்குடியிலிருந்து திருப்பத்தூர் — கோட்டூர் வழியாக முத்துப்பேட்டை செல்லும் சாலையில் மீனமநல்லூர் என்னும் ஊரை அடுத்து உள்ளதுதான் இவ்வூர். பஸ் செல்லும் சாலையிலிருந்து மூன்று பர்லாங் தூரம் மண் சாலையில் நடந்து செல்ல வேண்டும். ஒரு நாளில் இரண்டு முறைதான் இவ்வூருக்குப் பஸ் செல்கிறது.

மருத நிலத்துக்கே உரிய விவசாயம்தான் இவ்வூர் மக்களுக்குத் தொழில். ஹரிஜனங்களில் பெரும் பகுதியினர் நிலம் இல்லாத விவசாயக் கூலித் தொழிலாளர்கள்தான். ஆற்றில் தண்ணீர் வரும் ஆறு மாத காலம்தான் இங்கு தொழில். அடுத்த ஆறு மாத காலம் இவ்வூர் மக்களின் சக்தி முழுவதும் வீணாகிறது.

காமராசர் காலத்தில் தமிழகமெங்கும் திறந்துவிடப்பட்ட கல்வி நீரோடை இவ்வூரை அவ்வளவாகப் பாதித்து விட்டது என்று—சொல்ல முடியாது. இப்பொழுதுதான் இவ்வூரைச் சேர்ந்த முக்குலத்தோரில் ஒரு இளைஞர் பி. ஏ. படித்துக் கொண்டிருக்கிறார். ஹரிஜன் பிரிவில் ஓர் இளைஞர் எம்.பி.பி. எஸ். படித்துக் கொண்டிருக்கிறார், சென்னை மருத்துவக் கல்லூரியில். ஒரு ஹரிஜனப் பெண் அருகில் உள்ள ஊரில் ஹைஸ்கூலில் பணி புரிந்து வருகிறார்.

இந்த ஊர் மன்னார்குடி சட்ட மன்றத் தொகுதிக்கும் நாகப்பட்டினம் நாடாளு மன்றத் தொகுதிக்கும் உட்பட்டது. பொதுவாக அரசியல் வாதிகள் பொதுமக்களை ஐந்து ஆண்டுகளுக்கு ஒரு முறை சந்திப்பார்கள் என்று நகைச்சுவையாகக் கூறுவதுண்டு. ஆனால் இக்கிராம மக்கள் தேர்தல் காலத்தில் கூடத் தங்கள் வேட்பாளரைக் காணக் கொடுத்து வைக்காதவர்கள்! ஆனால் சோலைக் குளத்தில் கட்சித் தகராறுகளோ ஜாதித் தகராறுகளோ எதுவும் ஏற்பட்டது கிடையாது. மக்கள் அவ்வளவு பண்பட்டவர்கள்.

கிராமங்களும் நகரங்களைப் போல் படாடோபத்தை நோக்கி நடை பயிலத் தொடங்கியுள்ள இக்காலத்தில் அமைதியான, அழகான கிராமமாகத் திகழ்கின்றது சோலைக்குளம்.

- நேசன்



### எனக்கென்ன அக்கறை?

உளுந்தூர்ப்பேட்டை விருத்தாசலம் டவுன் பஸ்ஸில் போய்க் கொண்டிருந்தேன். என் அருகில் ஒரு வெள்ளைச் சட்டைப் பெரியவர் அமர்ந்திருந்தார். முன் சீட்டில் ஒரு இளம் தம்பதி ஜன்னல்பக்கம் கையைநீட்டி நீட்டிப் பேசிக் கொண்டிருந்தார்கள். பெரியவர் அவர்களை அணுகி, "இந்தச்சாலையில் போக்குவரத்து அதிகம். கையை நீட்டிப் பேசினால் எதிரே வரும் வாகனம் கையைத் துண்டாக்கி விடும்" என எச்சரித்தார். உடனே கணவனுக்குக் கோபம் வந்து விட்டது. "எங்கள் கைகள் துண்டானால் பரவாயில்லை. நீங்கள் ஒன்றும் ஒட்ட வேண்டாம். உங்கள் வேலையைப் பாருங்கள்" என்றவுடன் பெரியவர், "உங்கள் கை போனால் எனக்கென்ன? என் வெள்ளைச்சட்டையில் ரத்தக் கறை படிந்தால் அவ்வளவு எளிதில் விடாதே என்ற அக்கறையில்தான் நான் சொன்னேன்" என்றார் நாசூக்காக. கணவன் முகத்தில் ஈயாடவில்லை.

-எம். ரமணி

# சினிமா சினிமா

திரைஞானி

**(அவரவர்கள் மனச்சாட்சி விமர்சித்தால்?)**



விஜயகாந்த்: 'சிவப்பு மல்லி'யில் விட்டுப் போன சில காட்சிகளில்நடித்திருக்கிறேன். அதே சிவப்பு, அதே ஏழை, அதே பணக்காரன், அதே அரிவாள், சட்டம், ரத்தம், கொடி எக்சட்ரா... எக்சட்ரா. எனக்கே வசனம் பேசிப் பேசிப்போரடிச்சுப்போச்சு. கான்ஸ்டபிள், கம்யூனிஸ்ட் ஆன கதையிலே என்ன புதுசா நடிக்க முடியும்?

ஸ்மிதா: கண்ணடிக்கிறது, பிக்பாக்கெட் செய்யறது இதுதான் என் வேலே. நடிப்பு அப்புறம்தான். திருடியை மருமகளா ஏத்துக்கற அதிசய மாமியாரோட நான் அடிக்கிற லூட்டி கத்தப் பேத்தல்.

பண்டரிபாய்: 'எவர்கிரீன்' அம்மா என்னைப் போல யாராவது உண்டா? மருமகள் சொல்றதெல்லாம் வேதவாக்குன்னு தலையாட்டச் சொன்னாங்க. ஆட்டினேன். தப்பா?

உஷா: அண்ணா விஜயகாந்தோட வாயாடறதைத் தவிர நான் கண்ட பலன் என்ன? ஒரு 'லவ்' உண்டா? 'டூயட்' உண்டா? அட்லீஸ்ட் நல்ல காரக்டராவது.... சே!

ராஜேஷ்: 'டியர் மாப்பிள்ளே' வேணும்னு என்னைத்தான் கூப்பிடறாங்கோ. படம் முடியும்போதுதான் என்னைப் படத்திலே காட்டணுமா? வரவர இது ஒரு வியாதியாப் போச்சு.

ராமநாராயணன்: கதையைச் சொல்லாமே கருத்தைச் சொல்லிப் பார்த்தேன். ஜனங்களுக்குப் புடிக்கலே. படம் பார்க்கறவங்க ரொம்பப் பேரு ஏழைங்க என்கிற நினைப்பு எனக்கு. அது தப்பு தப்புன்னு தலையிலே இப்போ குட்டிக்கிறேன்.

திரைஞானி: இனிமே 'சிவப்பு' என்கிற பேரிலே எந்தப் படம் வந்தாலும் ஓட்டம் பிடிப்பேன்.

## சிவந்த கண்கள்

வி.கே. ராமசாமி: சிரிக்கக் கெடுக்கிற வில்லன் நான் ஒருத்தன்தான். எனக்கு எதுக்கு பார்ட்னர்? எனக்கும் தொழிலாளர்களுக்கும் என்ன பகை? ஒண்ணுமே புரியலே. படத்திலே ரத்தம் சிந்தி நடிச்சிருக்கேன். போதாதா?

ஹாஜா ஷெரீப் அண்டு கோ: நாங்க மூணு பேரு. அசல் வாண்டுத்தனமாப் பேசி 'அலட்டலா' நடிச்சது மட்டும் இல்லே; பாத்ரூமிலே செய்ய வேண்டியதை யெல்லாம் தேர்தல் வாசகங்கள் மீது பப்ளிக்கா செய்து புரட்சி பண்ணி யிருக்கோம். ஜனங்க எங்க மூணு பேர் நடிப்பைத்தான் ரசிக்கிறாங்க.

சந்திரன்: படத்திலே என் பேரு 'ஏற்பாடு!' வி. கே. ராமசாமிக்கு வலது கை. ஜனங்களைச் சிரிக்க வைக்கிறதும் என் ஏற்பாடு தான்.

**பதேராபாடு**

'மணல் கயிறு' படத்தில் விசுவுக்கு அந்தப் பக்கமும் இந்தப் பக்கமும் ஆடுகள் நின்று கத்துவது போன்ற ஒரு காட்சி வருகிறது. இந்த இரண்டு ஆடுகளுக்கும் குரல் கொடுத்திருப்பவர்கள் யார் தெரியுமா? ஒரு ஆடு: மனோரமா. மற்றொரு ஆடு அவரது மகன் பூபதி.



# கேள்வியும் பதிலும் நாளை



கேள்வி: ரொம்ப நாளைக்குப் பிறகு ஒரு நல்ல கதையைத் திரையில் சொல்லி யிருக்கிறார்கள் என்பது உண்மையா?

பதில்: உண்மைதான். சினிமா உருவத்திலே ஒரு பெரிய நாவல் படித்த மாதிரி இருக்கிறது.

கேள்வி: டூயல் ரோல் கதையா?

பதில்: டூயல் ரோல்படத்திலே கிடையாது. ஆனால் இரண்டு பெயர் வந்து டூயல் ரோல் படத்தைவிடசுவாரஸ்யத்தை உண்டு பண்ணுகிறது.

கேள்வி: கதை சஸ்பென்சாப் போகும் போலிருக்கிறது. கார்த்திக் எப்படி நடிச்சிருக்கார்?

பதில்: இடைவேளைக்கு அப்புறம்தான் கொஞ்சம் சுறுசுறுப்பாக நடித்திருக்கிறார். அவரோட நடிப்பில் சோகக் களை அதிகம் இருக்கிறது.

கேள்வி: அருணா, பூர்ணிமா தேவி இதில் யார் கார்த்திக்கைக் காதலிக்கிறார்கள்?

பதில்: இரண்டு பேரும் காதலிக்கிறார்கள். பூர்ணிமா தன்னை அவர்காதலிக்கவில்லையென்று தெரிந்ததும் இறந்து போகிறார். அருணா கல்யாணம் செய்து கொண்டு கடைசிவரை வந்து கண்ணீர் விடுகிறார்.

கேள்வி: அருணா நடிப்பு எப்படி?

பதில்: அவருடைய அகன்ற கண்களைப் போல நடிப்பும் கொஞ்சம் இதிலே அகலம் தான். கதாநாயகியாகத் தனக்கு நடிக்கத் தகுதி இருக்கிறது என்று நிரூபித்துள்ளார்.

கேள்வி: நெடு நாட்களுக்கு அப்புறம் ஸ்ரீவித்யா இதிலே நடித்திருக்கிறாராமே?

பதில்: ஆமாம். கார்த்திக்கைப் படாத பாடுபடுத்தும் வில்லி இவர்தான். உடம்பிலே மட்டும் இல்லாமல் நடிப்பிலும் தான் இளைக்கவில்லை என்று காட்டியிருக்கிறார்.

கேள்வி: வேறு யார் யார் நடிக்கிறார்கள்?

பதில்: படம் முடியறதுக்குப் பத்து நிமிஷத்துக்கு முன்பு வக்கீலாக வருகிறார் ஜெய்சங்கர். தலைப்பாகையும் கோட்டும் அணிந்து இட்டிலிக்கு மாவாட்டுகிற அழகும் கோர்ட்டிலே கேள்வி கேட்கிற ஜோரும் இன்னமும் கொஞ்ச நேரம் நடிக்க மாட்டாராான்னு நினைக்க வைக்கிறார். வக்கீல் மாமி வடிவுக்கரசி. கச்சிதம்.

கேள்வி: உங்களுக்கு ரொம்பப் பிடித்த இடம் எது?

பதில்: ஸ்ரீவித்யாவைக் கார்த்திக் கொலை செய்ய வரும்போது அவர் பேசும் பேச்சும் ஜெயிலில் கார்த்திக் ஸ்ரீவித்யாவைப் பேசி மடக்கும் இடமும்.

கேள்வி: டைரக்டர் என். முருகேஷுக்கு இது முதல் படம். தேறுவாரா?

பதில்: தேறுவார். குரு பாக்யராஜின் சாயல் இல்லாமல் ஒரு சிக்கலான சீரியஸ் கதையை சஸ்பென்ஸ் உடையாமல் கொண்டு போயிருக்கிறார்.

கேள்வி: குடும்பத்தோடு போய்ப் பார்க்கலாமா?

பதில்: பார்க்கலாம். கார்த்திக்கின் 'கெட் அப்'பும் கதையின் 'செட்-அப்'பும் புதிதாக இருக்கின்றன.

# சினிமா



மறைந்த நடிகர் சசிகுமாரின் சகோதரர் ராமகிருஷ்ணன் இப்போது திரைப் படத்தில் நடிக்கத் துவங்கி யிருக்கிறார். இவர் நடித்துக் கொண்டிருக்கும் முதல் படத்தின் பெயர் ''வான் கோழி மயிலாகிறது''. ராமகிருஷ்ணன் ஒரு டாக்டர். ஜெயின் ஆஸ்பத்திரியில் பணியாற்றிக் கொண்டு ஒரு கிளினிக்கும் நடத்தி வருகிறார். தஞ்சாவூரில் டாக்டராக இருந்த இவர் சென்னைக்கு வந்து மூன்று ஆண்டுகள் ஆகின்றன. இன்னும் திருமணம் ஆகவில்லை.

டாக்டராக இருந்து கொண்டே படங்களில் நடிக்க முடியுமா? நீங்கள் நடிகராவதற்குக் காரணம் என்ன? என்று கேட்டதற்கு இவர், ''இப்போது ஆஸ்பத்திரிக்கு லீவு போட்டுவிட்டு ஷூட்டிங்கிற்குச்செல்கிறேன். இரவு ஷூட்டிங் முடிந்தவுடன்கிளினிக்கிற்குச் செல்கிறேன். நான் திரைப் படங்களில் நடிப்பதே நிறையப் பணம் சம்பாதித்துச்சொந்தமாக ஒரு பெரிய நர்ஸிங் ஹோம் கட்ட வேண்டும் என்பதற்காகத்தான். அப்படிக் கட்டிவிட்டால் நிறையடாக்டர்களை நியமித்து மருத்துவத்தில் என் சேவையைத் தொடர்வேன்'' என்றார்.

-கலாமூர்த்தி

---

# தொட்டால் சுடும்

**(ராஜ்பரத்துக்குப் ''படித்தால் சுடும்'' சில கேள்விகள் சமர்ப்பணம்)**

- ஊரில் உள்ள ஆபீஸ் மானேஜர்களைத் தலைகுனிய வைப்பதுதான் உங்கள் படத்தின் நோக்கமா?
- ப்ரமோஷன் கேட்கும் குமாஸ்தாக்களிடம் ''ஒரே ஒரு நாளைக்கு உன் மனைவியை எனக்கு விட்டுக் கொடு'' என மானேஜர் கேட்கும் அநாகரிகக் கேள்வியைக் கொஞ்சம் நாசூக்காகச் சொல்லியிருக்கக் கூடாதா?
- 'கத்தி யின்றி இரத்தமின்றி யுத்தமொன்று வருகுது' என அன்று ஒரு கவிஞர் பாடினார். அந்த மாதிரி 'கத்தியின்றி இரத்தமின்றி' ஒரு படத்தை எடுக்க ராஜ்பரத் முன்வர மாட்டாரா?
- 'த்ரில்' என்றால் என்ன? படம் தயாரான போது அது எங்கே போயிற்று?
- மானேஜராக நடித்தவரை எங்கிருந்து பிடித்தீர்கள்? அந்த அசட்டுப் பல் இளிப்புக்குப் பொறுப்பானவர் நீங்களா? அவரா?
- சுகாசினி நேச்சுரலாக நடிக்க வேண்டியதுதான். 'இந்த மாதிரியான படங்களுக்கு அது பொருந்தாது. கொஞ்சம் கூட நடிக்க வேண்டும்' என்று எடுத்துச் சொல்ல மறந்து விட்டீர்களா?
- வடிவுக்கரசியைத் திரை உலகில் கட்டுப் பெட்டி என்றே அனைவரும் ஒதுக்கிவிட்டனர். உங்களது படத்திலேயும் அப்படியே வருகிறார். கணவனது அநியாயமான கோரிக்கைக்கு அப்படிப்பட்ட 'கட்டுப்பெட்டி'யை அவ்வளவு சீக்கிரமாக ஒப்புக்கொள்ள வைத்தது சரியில்லைதானே?
- கடைசியாக ஒரேஒரு கேள்வி. இப்படிப்பட்ட ''ப்ராய்ட் தியரி'' படத்தைக் காலம் சென்ற திரை உலகப் பிரமுகர்களான வாசன், ஏ.வி.எம்., கண்ணதாசன், முத்துராமன்— இந்த நால்வருக்கும் சமர்ப்பணம் செய்திருக்கிறீர்களே! இது எந்த விதத்தில் நியாயம்?







# சினிமா

## பூர்ணிமா ஜெயராமின் ஆ பேட்டி

ஆடை: எனக்குப் பிடித்த ஆடை சுடிதார் கம்மீஸ்தான். மிடிஸ் பிடிக்காது.

படத்தில் நான் குறைந்த ஆடை அணிந்து நடித்த படம் 'நாபிக்' என்கிற வங்காளப் படம். அப்படத்தில் ஏழைப் பெண்ணாக நடித்தேன். கிழிந்த, அழுக்கேறிய பாவாடை தான் என் உடை. ரிச் காஸ்ட்யூம் அணிந்து நடித்த படம் 'கானம்' மலையாளப் படம். பரத நாட்டியம் ஆடிய காட்சிகளில் விலை உயர்ந்த ஆடைகளை – பட்டுப் புடவைகளைக் கட்டிக்கொண்டு நடிக்கப் படாத பாடு பட்டேன்.

● ஆச்சரியம்: 'மஞ்சள் விரிஞ்ச பூக்கள்' மலையாளப் படத்தில் நடிக்கும்போது அப்படத்திற்கு மாநிலப் பரிசு கிடைக்கும் என்று நான் நினைத்துக்கூடப் பார்த்ததில்லை. ஏன்! அதுவரை நான் மலையாளப் படங்களையே பார்த்ததில்லை. திடீரென்று ஒரு நாள் அப்படத்திற்குப் பரிசு கிடைத்திருக்கிறது என்று சொன்னபோது எனக்கு ஏற்பட்ட ஆச்சரியம் தான் மிகப்பெரிய ஆச்சரியம்! பரிசு கிடைக்கும் அளவு அந்தப் படத்தில் என்ன இருக்கிறது என்று தெரிந்து கொள்ள நான் மீண்டும் அந்தப் படத்தைப் பார்த்தேன். அப்போதும் என் ஆச்சரியம் நீங்கவில்லை. ஆல் இந்தியா கிரிடிக்ஸ் இப்படத்தைச் சிறந்த படமாகத் தேர்ந்தெடுத்துப் பரிசு வழங்கியபோது என் ஆச்சரியம் மேலும் அதிகமாயிற்று.

● ஆகாய விமானம்: சின்ன வயதில் என் தம்பி ஸ்ரீராம் ஆகாய விமானத்தைக் காட்டிப் பயமுறுத்தியதை இன்றைக்கு நினைத்தாலும் சிரிப்பு வருகிறது. 'விமானம் மேலே போகப் போகச் சிறியதாகி அதில் பிரயாணம் செய்பவர்கள் நசுங்கிச் செத்துப் போவார்கள்' என்று கூறி என்னைப் பயமுறுத்துவான்.

நான் பார்த்த ஆகாய விமான நிலையங்களில் சிங்கப்பூரில் புதிதாகக் கட்டப்பட்டுள்ள 'சாங்கி (Changi) விமான நிலையம்தான் நவீனமானது. 'தாய் மூகாம்பிகை' படத்திற்காக இந்த விமான நிலையத்தில் நான் நடித்த காட்சிகள் சமீபத்தில் படமாக்கப் பட்டன.

● ஆண்கள்: ஆண்களிடம் பொதுவாக நான் கண்டிப்பாகத்தான் பழகுவேன். அவசியமில்லாமல் பேச மாட்டேன். அது என்னுடைய 'வீக்னஸ் என்று கூடச் சொல்லலாம்.

எனக்கு பாய் பிரண்ட்ஸ் கிடையாது. கேர்ல் பிரண்ட்ஸ் கூட அதிகம் இல்லை என்கிறபோது பாய் பிரண்ட்சுக்கு எங்கே போவது? பெண்களிடம் 'பேக் பைட்டிங்' அதிகம். ஒருசிலர் நன்கு பழகுவார்கள்.

● ஆஸ்பத்திரி: கடவுள் புண்ணியத்தால் ஆஸ்பத்திரிக்குப் போக வேண்டிய சூழ்நிலை எழுந்ததில்லை. இன்ஜெக்ஷன் போட்டுக் கொண்டதில்லை. மாத்திரை சாப்பிட்டதில்லை.

சின்ன வயசில் என் தம்பியை ஆஸ்பத்திரிக்குக் கூட்டிக்கொண்டு போய் அழைத்து வருவதற்குள் அங்குள்ள மருந்து வாசனை தாங்காமல் மயக்கம் போட்டுக் கீழே விழுந்து விட்டேன்.

ஆஸ்பத்திரி காட்சிகளில் நடித்துள்ளேன். நோயாளியாக நடிப்பது ரொம்பச் சுலபம். படுக்கையில் படுத்துக் கொண்டே முக பாவங்களை மட்டும் காட்டினால் போதும்.

● ஆசை: வெயில் காலத்தில் காஷ்மீர் போக வேண்டும் என்று ஆசை. யாரும் அங்கே படப்பிடிப்பு நடத்த அழைக்கவில்லை. பாலு மகேந்திராவின் மலையாளப் படத்திற்காக பெங்களூர் போகப் போகிறேன். முதல் முதலாக இந்தி நடிகர் அமோல் பலேகர் என்னுடன் கதாநாயகனாக நடிக்கிறார்.

டிஸ்னிலாண்ட் போய்ப் பார்க்க வேண்டும் என்கிற ஆசையும் எனக்கு இருக்கிறது. பாலசந்தர் படத்தில் நடிக்க முன்பு என்னை அழைத்தார்கள். ஆசையாக இருந்தேன். அது நிறைவேறாமல் போயிற்று.

● ஆவி: பேய் பிசாசு ஆவிகளின் மீது எனக்கு நம்பிக்கை இல்லை. என்றாலும் அவற்றைப் பற்றி யார் கதை சொன்னாலும் எனக்குப் பயம்தான்.

● ஆபரணங்கள்: தங்க நகைகளை விட எனக்கு வெள்ளி நகைகள்தான் பிடிக்கும். வெள்ளி நகைகள் ஒரு செட் வைத்துள்ளேன். பிளாக், க்ரே, ப்ளு கலர் உடைகளுக்கு இந்த நகைகள் மாட்ச் ஆகும்.

மஞ்சள், சிவப்பு நிற உடைகளுக்குத் தங்க நகைகள் எடுப்பாக இருக்கும்.

'படை ஓட்டம்' என்கிற மலையாளப் படத்தில்தான் நிறைய ஆபரணங்கள் அணிந்து நடித்துள்ளேன். சரித்திர சம்பந்தப்பட்ட ஃபோக்லோர் படம். உடம்பெல்லாம் ஏகப்பட்ட நகைகளைப் பூட்டி விட்டார்கள்.







### எளிமையின் உருவம்

1976ம் ஆண்டு.

அப்போது நான் கல்லூரி மாணவன். சென்னை காந்தி சமாஜம் நடத்திய கட்டுரைப் போட்டியில் வெற்றி பெற்று, அதற்குரிய பரிசாக - இந்தியா முழுவதும் காந்திஜிக்குச் சம்பந்தமுடைய - காந்திஜி வாழ்ந்த இடங்களைப் பார்த்து வர அனுப்பினார்கள். மொத்தம் நாற்பது மாணவர்கள்.

ஜனவரி 30 டெல்லி ராஜ்காட்டில் காந்தி சமாதியில் அஞ்சலி செலுத்திவிட்டு ஆச்சார்ய கிருபளானியைச் சந்தித்தோம். எங்களை வரவேற்று அமர வைத்து ஒரு மணி நேரம் பேசிக் கொண்டிருந்தார்.

''பாரதத்தின் இளைய சமுதாயம் எதிர் காலத்தில் என்ன செய்யப் போகிறதுஎன்பதை எண்ணி எண்ணியே உருகிக் கொண்டிருக்கிறேன்'' என்று மனம் நொந்து பேசினார்.



பத்து நிமிடம் கழித்துத்தான் கவனித்தேன். கிருபளானி தம் காலில் அணிந்திருந்த வெள்ளை நிற ரப்பர் 'கட் ஷூ'பல இடங்களில் கிழிந்திருந்தது. கிழிந்த பகுதிகளைத் தையல் போட்டுத்தான் அணிந்திருந்தார். ஏழெட்டு இடங்களில் தையல்.

எனக்கு உடனடியாக நினைவுக்கு வந்தது:

வெள்ளைச் சட்டையில் சின்னப் புள்ளியாக ஒரு கறை பட்டு விட்டாலும் கவலை கொள்கிற - ஒரு நாளைக்கு மூன்று முறை சலவை வேஷ்டி, சலவைச் சட்டை மாற்றுகிற நம்மூர் அரசியல்வாதிகள்தான்!

கிருபளானியின் மரணச் செய்தியைக் கேட்டதும் அவருடைய இந்த எளிமைதான் சட்டென்று நினைவில் வந்து பளிச்சிட்டது.

- ஆர்.சி. சம்பத்

### தனித்தீவில் சோ!

இலங்கை வானொலியில் 'சோ' அவர்களின் சுவையான கேள்வி-பதில் நிகழ்ச்சி மறு ஒலிபரப்புச் செய்யப்பட்டது. ஒரு நேயர் பாதியில் நின்றுபோன தம் கனவின் மீதியைச் சொல்லுமாறு கேட்டிருந்தார். தான், மற்றும் சோ, பிறர் அனைவரும் ஒரு விமானத்தில் சேர்ந்து சென்று கொண்டிருக்கையில் விமானம் வெடித்து ஒரு தீவில் சோ மட்டும் தனியாகப் பிரிந்துவிழுந்து விடுகிறார். அரை குறை ஆடையுடன் திரியும் பெண்களிடையில் ஆண்கள் வாடையே இல்லாத தீவில் ''ஆணழகனான சோ'' (!) கும்பலாகப் பெண்கள் சூழ்ந்து கொள்கிறார்கள். இத்துடன் தம் கனவு கலைந்ததாய்க் குறிப்பிட்ட நேயர் முடிவைக் கேட்டார்.



சோ பதிலளிக்கையில் தாம் நடித்தும் பாடியும் காட்ட ஆரம்பிக்க அலறி அடித்து அப்பெண்கள் யாவரும் கடலில் குதித்துத் தற்கொலை செய்து கொள்ள, அத்தீவின் தனிச் சக்கரவர்த்தியாகத் தான் முடி சூடிக்கொண்டதாகக் கூறினார்!

-ஜி. சதாசிவம்






## "தாளிப்பு" கடுகு

# கடன் கேட்டுப்பாருங்கள்!




● கடன் கேட்பது ஒரு கலை என்றால், கடன் கொடுக்காமல் தப்பித்துக் கொள்வதும் ஒரு கலை. இந்தக் கலையை அதாவது கடன் தராமல் சால்ஜாப்பு சொல்வதை நான் கற்றுக்கொள்வதற்கென்றே பலரைக் கடன் கேட்டேன். அதன் காரணமாகச் சில உத்திகள் எனக்குத் தெரிய வந்தன. யான் பெற்ற பேற்றை உங்களுக்கும் தர ஆவல்.

● ''என்னப்பா ராமசாமி, பத்து ரூபாய் கடன் வேண்டுமே'' என்று நான் கேட்டேன். ராமசாமி சொன்னான்:

''பத்து ரூபாய் வேண்டுமா? கிண்டல் பண்ணாதே!... 'மாசக் கடைசி, இவன் கிட்டப் பணம் இல்லை' என்கிறதைத் தெரிஞ்சு வெச்சுண்டுதானே ஆழம் பார்க்கிறே?....''

● கோபாலசாமி சொன்னதைக் கேளுங்கள். ''ஏனப்பா, நேத்துத்தான் கிருஷ்ணசாமி கிட்டே நான் இருபது ரூபாய் கடன் கேட்டேன். பணம் தராவிட்டாலும் அந்தக் கிருஷ்ணசாமி ஊரெல்லாம் தண்டோராப் போட்டுட்டான் போலிருக்கு. அதனால்தான் நீ....இப்படிப்பட்ட நீ?... டெய்லி நூறு ரூபாய் நோட்டை மாத்தற நீ... இப்படி டிராமா போடறே... அட, உன்னைப் பணம் கடன் கேக்கலை, விடப்பா.''

● நாராயணசாமி கூறியது: வரவுக்குள்ளே செலவை அடக்கணும். இன்னிக்குப் பத்து ரூபாய் கேட்பே. நாளைக்கு நூறு... அப்புறம் ஆயிரம். அடுத்த வாரம் பத்தாயிரம். அடுத்த மாசம் லட்சம்... இப்படித்தான் போகும். கடைசியில் திவாலாகி விடுவாய்... கடன் கேட்கிற வழக்கத்தை விடு. உன் நல்லதுக்குத்தான் சொல்றேன்.''

● ரங்கசாமி கேட்டது: ''பத்து ரூபாயா? இன்னிக்குத் தேதி எட்டு.... சம்பளம் வாங்கினபணம் என்ன ஆச்சு?பிடிப்புப் போக உன் சம்பளம் எவ்வளவு? வாடகை, ஓட்டல் பில், ஊருக்கு அனுப்பினது இதெல்லாம் எவ்வளவு? ஒவர்டைம் கூட இந்த மாசம் வந்தது? சீட்டுக் கடனும் போன மாசம் முடிஞ்சுட்டுது. ஒவ்வொரு பைசாவுக்கும் முதல்லே கணக்குச் சொல்லு!''

● கோவிந்தசாமி டைப்பே வேறு. ''கேட்கிற கடனை இருபது ரூபாயா கேள். யாராவது கொடுத்தால் அதில் எனக்குப் பத்து ரூபாய் கொடு... எனக்கும் பணம் தேவை. யாரைக் கேட்கிறதென்று தெரியவில்லை!''

● அண்ணாசாமி சொல்லியது டாப்: ''உனக்குப் பத்து ரூபாய் தருவது ஒண்ணும் பெரிய கஷ்டமான காரியம் இல்லை. ஆனால் இது ஆபத்தான பழக்கம் என்பதை முதலில் சொல்லிடணும். நேத்துதான் மெடிகல் ஜர்னலில் படித்தேன். கடன் வாங்கிவிட்டால் மனசில் ஒரு டென்ஷன் ஏற்படறது. இதன் காரணமாக பிளட் பிரஷர் அதிகமாயிடறது. தூக்கமும் சரியாக இருக்காது. ஹார்ட்டுக்கும் தொல்லை வரும். கடன் வாங்குவதும் ஒண்ணுதான் சைனைட் விஷத்தைச் சாப்பிடறதும் ஒண்ணுதான்னு அழுத்தம் திருத்தமா எழுதியிருக்கிற கட்டுரையைப் படிச்ச பிறகு உனக்குப் பணம் கொடுத்தால் அது நான் பண்ற பெரிய பாவமாக இருக்கும்.''

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press Race Course Road Guindy, Madras-600 032. (Phone: 431543)
Assistant Editor: P.S. Mani Layout Artist: Nambi Editor: K. Rajendran



- இந்தக் காலத்திலே கல்யாணத்துக்கு இவ்வளவு பெரிய வாழை மரம்...!
- தாத்தா! அது பிளாஸ்டிக் வாழை மரம்!




※ ஹோட்டல் சாப்பாடு 5 ரூபாயாம்!பக்கத்திலே நடக்கிற கல்யாணத்திலே அந்த ஐந்து ரூபாயைப் பரிசாக் கொடுத்துட்டு வடை பாயசத்தோட 'ஜம்'னு சாப்பிட்டுடலாம்! தெரியாத இடமா இருந்தா என்ன? எவன் கண்டுக்கப் போறான்!



※ பவர் கட் இருட்டிலே, என்னைக் கட்டிப் பிடிக்கக் கிட்டு... என்ன அவசரம்.. விடுங்க!

※ கட்டிப் பிடிக்க அவசரம் இல்லே,... எழுபதினாயிரத்துக்கு நகை போட்டிருக்கே... எவனாவது இருட்டிலே தட்டிக்கிட்டுப் போயிட்டான்னா?




- சாஸ்திரிகள் இப்ப ரொம்ப 'பிஸி'! மந்திரம்கூட டேப்தான்!



※ பூஸ்டர் வாங்கவேண்டியதுதான் அம்மா!

※ நானும் அதுதாண்டா சொல்றேன். வரதட்சிணை பூஸ்டரோட வர பொண்ணுதான் தேவை!

# கல்யாண கலாட்டா!

அட்டைப் படத் தொடர்ச்சி!

REGISTERED No. M 4392
Registered as a Newspaper in Sri Lanka

# ராசி வண்ணம்

## சிம்மம்

ஆற்றுவார் புதுமை அறிவார் பிறர் மனம்
போற்றிட வாழ்வார் சிம்ம ராசிக்கிவை குணம்
வெண்ணிறம் மாணிக்கம் ஞாயிறுடன் என் ஒன்று
திண்ணமாய் சொல்வேன் சிம்மத்திற்கிவை நன்று
ஆசுகவி கட்டுவின் கவியெலாம் அருமை
பேசுவேன் இங்கு சிம்மத்தின் பெருமை.



**ஏஷியன் பெயிண்ட்ஸ்**